## நலே'விதி

நான்
ஏழை
என்பதற்கு
இன்னுமொரு
எடுத்துக்காட்டு:
எனது
தலைமயிர்கள்
இரும்புச் சரிகைகள்
—வெள்ளியல்ல!

—ப. கங்கைகொண்டான்

## கண்ணகி

பாதச் சிலம்பால்
பதியை இழந்தவள்
பருவச் சிலம்பைத்
திருகி எறிந்தனள்.

## பர்ட்ஸ் வ்யு

இரண்டாம் உலகத்
தமிழ் மாநாட்டுக்குத்
திறக்கப்பட்டன சென்னையில்
இருபத்தியொரு
புதிய லெட்ரீன்கள்.

## தீண்டாமை

ராமர் தடவி
அணில் கோடு பெற்றதேல்
சீதையைத்
தொட்டதே இல்லையா?

—நீலமணி



ஓவியம்: ஹரிதாஸன்


# கசடதபற

5 பிப்ரவரி 1971
30 காசு

ஒரு வல்லின மாத ஏடு

1 தேவடி தெரு
சென்னை-4

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

# புனித ஜெனே

**Is Truth the height of social-norms or is it the height of denying everything society is?**

தர்மு அரூப் சிவராம்

கலாச்சார உணர்வுக்கும் கலைக்குமிடையே உள்ள பந்தம். இந்த நூற்றாண்டில் சில அடிப்படைப் பிரச்சினைகளை ஏற்படுத்தியிருக்கிறது. கலாச்சாரம், culture, என்பது கலையுணர்வைவிட சமூக உணர்வைச் சார்ந்த ஒன்றாகவே விருபம் அடைந்துள்ளது இதன் காரணங்களுள் ஒன்று எனலாம். இதன் விளைவாக சமூக உணர்வையும் அதன் மதிப்பீடுகளையும் போஷிப்பதே கலை என்ற கொள்கை, கலாச்சாரக் கொள்கையாக அவ்வப்போது எழுந்துள்ளது. இதன் தீவிரவாதம், கலைஞனையும் சமூகப் பிராணியாக இருந்தாக வேண்டும் என்று வற்புறுத்தும் அளவுக்குப் போவதுண்டு. இந்த அளவுக்கு இக்கொள்கை ஒரு தலைப் பாரமாகச் சரியும்போது கலாச்சார சக்திகளே க்ஷீணித்துள்ளன என்பதுதான் இதிலுள்ள முரண் நிலை (Paradox). இத்தகைய சமயங்களில் உண்மையான கலைஞனின் இயக்கம் சமூக விரோதமானதாகக் கருதப் படுகிறது. இது போன்ற நிலைமைக்கு ஆளாகிய ஆசிரியர்கள் சமூக விரோதிகளாக வாழாததை சுட்டிக்காட்டி உண்மையில் அவர்களது ஆரோக்கியமே அவர்களது எழுத்தின் வெளிப்படையான சமூக விரோதத்தை சமாதானப் படுத்துகிறது எனவும் நிரூபித்துத்தான் இவர்கள் இலக்கிய பீடத்துக்கு அநுமதிக்கப் படுகிறார்கள். எல்லாரும் அறிந்த ஒரு உதாரணம் என இதற்கு டி.எச். லாரன்ஸைக் குறிப்பிடலாம். ஆனால் இவனையே ஒப்புக் கொள்ள மறுப்பவர்கள் நம்மிடையே நமது தமிழ் இலக்கியக் களத்தில் நிற்கிறார்கள். — லாரன்ஸின் 'லேடி சாட்டர்லீஸ் லவர்'க்கு விமர்சகர் ரைடர் ஹொக்கார்ட் எழுதிய முன்னுரையை 'எழுத்து'க்கு அனுப்பியபோது அதன் ஆசிரியர் அதை மறுத்ததோடு நிற்காமல் நேர் சந்திப்பில், "How dare you send it to me" என்று 1967-ல் கேட்டார். இது போன்ற சில முக்கிய அடிப்படை விஷயங்களில் இந்தப் பத்திரிகாசிரியர் போன்ற முக்யஸ்தர்களது பார்வை மாறாவிட்டாலும் கலக்கமாவது அடையாதிருப்பது விநோதம் தான். ஏனெனில் இன்றைய உலக இலக்கியம் டி. எச் லாரன்ஸின் புரட்சிகரமான நாவல் அம்சங்களுக்கும் மேலே ஏறிச் சென்று சமூக கதிகளையே, அதுவும் அதன் தார்மிகத் தளங்களில் கலக்கிக் கொண்டிருக்கிறது. சமூக விரோதமானதென மனித தர்மமே ஒதுக்கும் குற்றங்களை உன்னதப் படுத்துமளவுக்கு எழுதுவோர் இன்று இருக்கிறார்கள். இது வெறும் கசப்பான உண்மை அல்ல. உண்மையில் பழைமை வாதிகளுக்கு இது பயங்கரமான ஒரு உண்மை. ஏனெனில் எந்த வகையிலும் சமாதானம் சொல்லமுடியாதவகையில் இவ்வகையாக எழுதுகிறவர்களின் படைப்புகள் குற்றத்தையே அனுசரிக்கின்றன. வெளிப்படையில் இது சமூக அநுசரணையானதுதான் என்று நிரூபிக்க, எழுதுகிறவனின் வாழ்க்கை கூட இடம் தருவதில்லை. இந்த அளவுக்குச் சிக்கலான எழுத்தாளர்கள் இன்று நிறையப்பேர் இருக்கிறார்கள் என்று சொல்லவில்லை. வடித்துப் பார்த்தால் உண்மையில் ஒருவன் எப்படியும் இவ்வகையானவனாகவே மிஞ்சுகிறான். அதே சமயத்தில் அவனே மிகப்பெரிய உலக இலக்கிய மேதைகளின் வரிசையிலும் நிற்கிறான். அவனே ஜான் ஜெனே.

இவன் சமூக விரோதியாகவே வாழ்ந்தவன். ஆனால் தத்துவாசிரியக் கவியான ஃப்ரெடரிக் நீஷே போன்றோரைத்தான் இவனுடன் சம இலக்கியத் தரத்தில் நிறுத்தலாம்.

இப்படிக் கூறுவது உமிர்வு நவிற்சியாகாது. உண்மையில் ஜெனேயைப் பற்றி எழுத முற்படும் எந்த எழுத்தாளனும், விமர்சகனும் இந்தவகையான அபரிமிதமான புகழுரைகளைத்தான் சொல்கிறான். ஜான் பவுல் சார்த்ர் இவனை எடுத்த எடுப்பிலேயே 'புனித ஜெனே' (செயின்ட் ஜெனே) என்கிறான். இதுவரை எந்த இலக்கியாசிரியனுக்கும், ஏன் கிறிஸ்துவ மத தத்துவாசிரியர்களான அகஸ்தின் போன்றோரைத் தவிர இதர தத்துவ மேதைகளுக்கே கிடைக்காத அடைமொழியாகும் இது.

இவ்வளவுக்கும் இவனது சாதனை என்ன? இவனது எழுத்திலோ, வாழ்விலோ அப்படி என்ன புனிதத் தன்மையிருக்கிறது? இதற்குப் பதிலை நாம் நேரே இவனது எழுத்திலும் வாழ்விலும் காணும்போது திடுக்கிடுகிறோம்.

ஏனெனில் இவனது எழுத்து முழுவதிலும் தனது சொந்த வாழ்விலேயே தானே நிகழ்த்திய சொந்தப் பாலுறவு வாழ்க்கையையும், திருட்டுத்தொழிலையும் பற்றித்தான் எழுதியுள்ளான். உண்மையில் இந்த இலக்கிய நிலைமை இதுவரை இலக்கியப் புரட்சிகள் யாவற்றையும் பொருட்டற்றவை யாகவே ஆக்கியுள்ளது.

பாவ புண்ணியத்தை மீறிய நீஷின் தத்துவவாதமோ, அதற்கிணங்க இயங்கிய மில்லர், கெமு, ஜின்ஸ் பெர்க் போன்றோரின் இலக்கிய தனி மனித வாழ்வோ — எல்லாமே இவனுடைய இலக்கிய உலகிற்கு முன்னுரை போன்றுதான் நிற்கின்றன எனக் காணலாம். ஏனெனில் இங்கு பரிசோதனையையும் தவிர்க்க முடியாமையையும் மீறிய நிதர்சனம் ஒன்று நிற்கிறது. ஜெனே தாய் தந்தையரற்று அனாதை விடுதியிலிருந்து திருடனாகினான். ஐரோப்பிய நாடுகள் யாவற்றிலும் சிறையிலிருந்திருக்கிறான். கடைசியில் பிரான்ஸிலேயே மீண்டும் மீண்டும் திருட்டுக்காக அகப்பட்டதின் பேரில் திருத்த முடியாத ஒருதிருடன் எனக் கண்டு ஆயுட்சிறைவாசம் பெற்றிருக்கிறான். இதிலெல்லாம் என்ன புனிதத் தன்மையிருக்கிறது?

உலகப் போருக்கு முந்திய ஐரோப்பிய பொருளாதார வரட்சியின் போது பிச்சைக்காரனாகவும் சொந்தப் பாலுறவுத் 'தாசி' யாகவும் கூடப் பிழைத்திருக்கிறான் இந்த மகா மேதை!

போயும் போயும் ஒரு யுத்த நிலைமையின் விளைவாக யாரோ அனாதையாக வாழ நேரிட்டுவிட்ட மேதை இவன் என்றும், இதெல்லாம் ஒரு விபத்து, ஏதோ தவிர்க்க முடியாமை என்றும் ஒதுக்க முடியாது. ஏனெனில் மேதையும் புனிதத்தன்மையும் இந்த விபத்துக்கும் தவிர்க்க முடியாமைக்கும் ஊடே மீறி எழுந்து எரிந்து கொண்டிருந்தது. அதோடு மேதை, புனிதத் தன்மை என்பவை வாழ இடமே இல்லாத சூழலில் வாழ்ந்திருக்கின்றன என்ற விபரம் விபத்தாகாது: தவிர்க்க முடியாமையுமாகாது. மூடர்களின் சமூகத்தில் மேதை பிறந்தால் அது விபத்து—அதாவது அதிசயம். பாதிரிகளின் நடுவே புனிதத் தன்மை இருந்தால் அது

தவிர்க்கமுடியாமை, அதாவது அங்கேபுனிதம் இருந்து விட்டால். ஆனல் இங்கே கலாச்சாரம் எவ்விதத்திலும் தழைக்க முடியாத, விபத்துக் கூட நேர முடியாத இடத்தில் பெரிய எழுத்து மேதை பிறந்திருக்கிருன். உண்மையில் பிரெஞ்சுக் கலாச்சார உலகமே ஜெனே என்ற பெயரை ஒரு கேள்விக் குறியாகத் தான் காண் கிறது. ஜெனே? ஒரு பதிலிறுக்க முடியாதகேள்வி. ஏனெனில் திருடனும்சொந்தப்பாலுறவுக்காரனுமான ஜெனே ஒரு கலாச்சார சக்தியை அதன் உச்ச கதியில் இயக்கியுள்ளான்! சமூகத்தில் இத்தகையவனது நிலை என்ன? அதாவது கலாச்சாரத்தை வளர்க்கவென்று ஏற்பட்ட சமூக அமைப்புகளையே முறியடிக்கும் இவனது இயக்கம் எத்தகைய தென்பது?

என்னவோ இந்தியத் தன்மை என்கிருேமே. அப்படிப் பார்த்தால் ஒரு எழுத்தாளனிடத்தில் எவ்வளவோ மனிதரீதியான குணவியல்புகளை நாம் எதிர் பார்க்கிருேம். ஆனல் டி. எஸ். எலியட் என்ற கவிஞர் எழுத்தாளனது எழுத்தை மட்டும்தான் நாம் அளக்க வேண்டும்; அவனை அல்ல என்ற கொள்கையை விமர்சனத்துறையில் நிலை நாட்டிவிட்டார். இருந்தும் திருடன், சொந்தப்பாலுறவுத் தாசி—எழுத்தாளன் என்ற விஷயத்தில் அதுவும் தன் வாழ்வையே அப்பட்டமாக, சுயசரிதையாக எழுதியவனிடத்தில், நாம் திடுக்கிடவே செய்கிருேம். இதன் காரணம் சமூகத்தால் அங்கீகரிக்கப் பட்டவைதான் நன்மையானவை என்ற நமது பிரமையாக இருக்கலாம். கலாச்சாரம் இந் நன்மைகளையே ஒட்டியவை என்ற பிரமையாக இருக்கலாம்.

இந்த வகையான, சமூக அங்கீகாரம் பெற்ற தன்மைகளை சமூக வரம்புகளுள், குடும்பம், பள்ளி என்ற வரம்புகளுள் வளர்ந்த காரணத்துக்காக மட்டும்தான் நாம் மதிக்கிருேம் எனலாம். இந்த நன்மைகளை மீறி எவ்விதமான புனிதத் தன்மையுமில்லை என்றும் நினைக்கிருேம். இதனுல்தான் ஜெனே புனிதமானவன் என்பது நாராசமாக ஒலிக்கிறது.

அப்படியானல் புனிதத் தன்மை என்றுல் என்ன என்ற விஷயம் தெளிவுபடவேண்டும்அல்லவா? சார்த்ர் ஜெனேயைப் புனிதமானவன் எனும் போது பழைய கிறிஸ்துவப் புனிதர்களின் தரத்திலேயே ஜெனேயை நிறுத்துகிருன் என்பதுதான் அர்த்தம். ஆனல் வெளிப் படையாகப் பார்க்கும் போது ஜெனே வெறும் சாக்கடை மனிதன்தான். ஆனலும் பழைய கிறிஸ்துவ புனிதர்கள் கடவுட் கோட்பாடு, மதநம்பிக்கை முதலியவற்றின் மூலம் பெற்ற அதே தரிசனங்களை ஜெனேயும் பெற்ருன். இது குற்றவாளியாக இருந்தாலும் தனது குற்றங்களை மன்னிக்கும்படி ஏதோ பாவமன்னிப்புப் பிரார்த்தனை பண்ணி அல்ல. தனது குற்றங்களையும் பாபகரமானதென நாம் கருதும் பாலுறவுகளையுமே மகத்துவம் பொதிந்தவையாகக் காணத்தக்க அபூர்வதிருஷ்டி ஜெனேயிடம் இருந்தது என்பது தான் ரகசியம். தனது அன்ருடக் குற்ற வாழ்வுக்கும் இழி நிலைக்கும் மீறிய எதையும் ஜெனே கும்பிடவில்லை. தனது இழி நிலை வாழ்வின் அகத்தையே ஊடுருவியது அவன் நோக்கு இந்த நோக்கு கண்டது புனிதத்துவத்தையே. புனிதமானவனே இவ்வித இழிவிலும் புனிதத்தைக் காண்பான், அடைவான் என்பதுதான் இதனூடே ஒளிரும் விசேஷ உண்மையாகும்.

ஜெனேயின் ஒவ்வொரு வசனத்திலுமிருந்துஇந்த உண்மை பீறிட்டுப் பாய்கிறது. வெளிப்படையான மேல் தோல் புனிதத்துவத்துக்குத் தலை சாய்ந்தபடி உள்ளூர அழுகிக் கொண்டு போகும் உலகின் கலாச்சாரங்கள் யாவற்றையும் நோக்கி மேதையின் கடூரமான பொறி பறக்கச் சிரிக்கிறது ஜெனே இலக்கியம்.

கவிதைகள், நாடகங்கள், நாவல்கள் என்றதுறைகளில் உழைத்துள்ள இதே எழுத்தாளன் பணத்துக்காக இலக்கியத்தை அர்ப்பணிப்பதை மகா கேவலமானதாகக் கருதியவன் என்பதுதான் குறிப்பிடத்தக்கது. உலகின் மேதைகளினுலேயே தேவதை எழுத்தாளன் என்று அழைக்கப்படும் இவனது இந்தப் புனிதத்தனமான இலக்கிய நோக்கின் அடியிலேயே இவனதுஉண்மையான ஆத்மாவைக்காணலாம். பணத்திற்காக எழுதுவதைவிட திருடலாம் என்று வேறு பெரிய எழுத்தாளர்கள் யாரும் சொன்னர்களோ தெரியவில்லை. ஆனல் ஜெனே பணத்துக்காக எழுதக் கூடிய ஆற்றல் இருந்தும் திருடினன். அதே சமயத்தில் பயங்கரமான பரிசுத்தத்தோடு சிருஷ்டித்தான். திருடுவதன் மூலமேனும் சரி இலக்கியத்தின் மீது பணவாடைபடக் கூடாது என்ற இப் பிரமிக்கத்தக்க கொள்கையின் அடியில் உள்ள புனிதத்தன்மைஉண்மையிலேயே அசாதாரணமானதுதான்.

1910-ல் அனதையாகப் பிறந்து திருடனகவும், சொந்த பாலுறவுத்தாசியாகவும்,பிச்சையேந்திவாழ்பவனகவும் வளர்ந்த ஜெனே தன் இலக்கிய வாழ்வை பணத்துக்கு அடிபணிய வைக்க மறுத்தான். அதே சமயம் கடுமையான சமயப் பயிற்சியின் மூலமே பெற முடியும் என்று சொல்லப்படுகிற ஆழ்ந்ததரிசனங்களை, சமயத்தையும் சமூக ஒழுங்கையும் கிஞ்சித்தும் அறியாத ஜெனே பெற்ருன். இவனது இழிவான வாழ்வையே ஊடுருவிய இவனது தீட்சண்யம்தான் இதன் ரகசியமாக இருக்க முடியும். தனது வாழ்வை மறுக்காமல், இகழாமல், சமாதானம்சொல்லாமல், அதையே வாயிலாக்கி தன்னைப்பற்றிய ரகசியங்களை அறிந்த இவனை சார்த்ர் 'புனிதஜெனே' (செயின்ட் ஜெனே) என்று அழைத்தது ஆச்சரியமல்ல. ஆனல் விஷயத்தின் ஆழம் அறியாதவர்கள் திடுக்கிட்டார்கள்.

திருட்டுக்காக பிரான்சிலேயே மீண்டும் மீண்டும் சிறைப்பட்ட ஜெனேயைத் திருத்த முடியாத திருடன் என்று ஆயுள் சிறைத் தண்டனை கொடுத்தார்கள். ஆயுட் சிறை வாசத்தில் ஜெனே இருந்த போதுதான் இலக்கிய உலகை உலுப்பிய அதிஅற்புத வசனசிருஷ்டிகளை எழுதினன். இவன் எழுதிய சூழலும், கடைசியில் அதே சிருஷ்டிகளுக்காக 'புனிதன்' 'தேவதை' என்றெல்லாம் புகழப்பட்டதும்ஜெனேயை பாதாள எழுத்துலகின் திரளுக்கியுள்ளன.

சிறையில் காகித உறை செய்யும் தொழிலை பிரெஞ்சு அதிகாரிகள் கைதிகளுக்குத் தந்திருந்தார்கள்.ஜெனே அந்த 'பிரௌன்' தாள்களிலேயே பென்சிலினல் உலகின் தலைசிறந்தஎழுத்துருவங்களின் வரிசையில் நிற்கப் போகிறவற்றை எழுதினன். இழிவானதும், ஆபாசமானதும் என்று படக் கூடிய விஷயங்களைத் தனது சொந்த வாழ்க்கையின் விபரங்களாகவும் தனது 'காதலர்கள்' வாழ்க்கை விபரங்களாகவும் தான் எழுதினன் ஜெனே. இப்படி கைதிகள் எழுதுபவை சிறை அதிகாரிகளின் கண்களில் படாமலிருக்க முடியாது. அடிக்கடி பரிசோதனை பண்ணப்படும் சிறையில் ஜெனே இவற்றை ஒளித்து வைத்தே எழுதினன். இருந்தும் ஒரு தடவை இவனது எழுத்துப் பிரதியை சிறையதிகாரி கண்டு வாசித்துப் பார்த்து விட்டு உதவாக்கரை விஷயம் எனக்கருதி எறிந்து விட்டார். ஜெனே மீண்டும் எழுதினன். ஏன்? எப்படியும் கண்டு

பிடிக்கப்பட்டு அழியப் போகிறவைதான் இப்பிரதிகள். சிறையை விட்டு வெளியே இப்பிரதிகள் போனலும் பிரசுரத்துக்கு ஏற்சப்பட முடியாத விஷயங்கள். பிரசுரமானலும் இவை நிச்சயம் தணிக்கை செய்யப்படும். ஆனல் ஜெனே எழுதினன். ஏன்? இதற்குத்தான் எவராலும், ஜெனேயால் கூட பதில் சொல்ல முடியவில்லை. இதன் அடியில்தான் அப்பழுக்கற்ற இலக்கியத்தின், ஏன், சிருஷ்டியின் ரகசியமே உள்ளதோ என்று தோன்றுகிறது.

ஜெனே எழுதினன். ஆயுட் சிறைவாசியாகயிருந்தபடியே தனது எதிர்காலத்தைப் பற்றிய நினைவோ, தனது எழுத்தின் எதிர்காலத்தைப்பற்றிய நினைவோ யின்றி எழுதினன். அவனது இலக்கிய வாழ்வின் மிகச் சிறந்த பகுதி என்று இதைத்தான். சொல்ல வேண்டும். ஆபாசம் என்று தென்பட்டதெல்லாமே இவனது எழுத்தின் மூலம் குழந்தையின் நிர்வாணம் போல பரிசுத்தமாயிற்று. ஒரு தெய்வத்தின் நிர்வாணச் சிலைபோல் புனிதமாயிற்று. சாதாரண இலக்கிய ஞானம் ஓரளவுக்கு உள்ளவனே இதை ஜெனே இலக்கியத்தில் காணலாம். 'எங்கள் மலர்ப் பெண்' 'ரோஜாமயமான அற்புதம்' என்ற இரு நூல்கள்தான் இந்த சிறைகால நூல்கள். 'ஒரு திருடனின் வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற நூலில்சுயசரிதையைக் காணலாம்.

சாக்கடையைச் சொர்க்கப் பாதையாக்கிற்று ஜெனேயின் இலக்கிய அற்புதம். சமூக நியதிகள் எதையும் ஏற்காத ஒருவனது ஒவ்வொரு கணத்திலும் பொன்மயமான அற்புதம் ஒன்று நிகழ்வதை நேரே அனுபவிக்கவேண்டுமானல் நாம்ஜெனேயைப் படிக்க வேண்டும். இந்த அற்புதம் ஏதோ சாமி ரகமானது என்று நான் சொல்லவில்லை. ஜெனே அப்படி ஒன்றும் 'சாமியார்' அல்ல. நான் குறிப்பிடுவது இலக்கிய அனுபவத்தை. இலக்கியம் எனும்போது கலாசார சக்தி என்றே இதைக் கொள்கிறேன். சமூக நியதிகளைக் கிஞ்சித்தும் ஏற்காத கலாசார சக்தி ஒன்று பேரிலக்கியமாகி உள்ளது. பாதாளவாழ்வின் பெருவெற்றியாகும். அதே சமயத்தில் மதத்தின் மூலமே பெறத் முடியும் என்று குறிப்பிடப்படும் உன்னத நிலைகளையும் இந்த உதவாக்கரை ஜெனே பெற்றிருக்கிறன் எனும் போது மதத்தையும் மீறிய ஒரு பரிமாணத்தை இவன் பெறுகிறன். இதற்காக இவன் எவ்வித சாமிக் கோலமோ, தியானமோ மேற் கொள்ளவில்லை. போலியான சமூக ஒழுங்குகளுக்கே அனுசரணையான அவற்றையும் மறுத்ததாலேயே ஜெனே வாழ்வின் பிரச்சினையை நேரடியாகச் சந்தித்தான். பிச்சையெடுத்தபடி ஸ்பெயினின் கிராமங்களைக் கடந்தபோது உலகு முழுவதையுமே தன் அன்பால் போர்த்தியபடி சென்றன் ஜெனே. அதேசமயம் கொலைகாரர்களோடு படுக்கையைப் பகிர்ந்தும் கொண்டான்.

மலர்களையும் கவிதைகளையும் நுகர்ந்தபடி வாழ்ந்த அதே ஜெனே, உணர்ச்சி வசப்பட்டால் தரிசன உணர்வு பெறத் தக்க அதே ஜெனே ஒரு ஐரோப்பியச்சிறையில் போலீஸ் அதிகாரிகளின் மலகூடத்தையும் சுத்தமாக்கியிருக்கிறன். சிறைப் பட்டதை விட இழிநிலை! இத்தகைய இழிவான அனுபவங்கள் பொதுவாகக் குற்றவாளிகளைக் கல் நெஞ்சர்களாக்கி எவ்வித நுண்ணுணர்வுக்கும் இடமே இல்லாமல் ஆக்கிவிடும். ஆனல் ஜெனேயின் மனமோ மேலும் பக்குவப்பட்டது.

இவை மட்டும் அல்ல. சமூகம் இதுதான் நல்லது, இது தீயது என்று செய்யும் விதிப்பாட்டை அப்படியே தலைகீழாக்குகிறது ஜெனே இலக்கியம். தான் தீண்டி வாழ்ந்த வாழ்க்கை மதிப்புகளான கொள்ளை போன்ற குற்றங்களையே மனிதச் செய்கையின் உந்நதங்கள் என ஜெனேயின் இலக்கியும் கூறுகிறது. 'அவனது போட்டோவின் கீழ் அவன் செய்த கொலைகளின் பட்டியல் உதயமாயிற்று' என்ற வரியில் 'உதயம்' என்ற சொல்லை ஜெனே குற்றத்தை உந்நதமானதாக்கவே உபயோகிக்கிறன். ஜெனே இலக்கியம் எடுத்த எடுப்பிலேயே நம்மை மின்னலாகத் தாக்கி அதிர வைப்பது இதனலேயே. ஆழ்ந்து நோக்கினல் ஜெனே என்ற பெயரே ஒரு இயக்கம் எனவேண்டும். நாம் வாழும் கூட்டத்துக்குள் எது உந்நதமானதோ அதுதான் நல்லது, புண்ணியகரமானது—மற்றதெல்லாம் பாபகரமானவை — என்ற பிரமை சமூகத்தினுடையது. 'அப்படியானல் நான் பிறந்தது தொட்டு வாழும் குற்றவாளிகளின் உலகில் புண்ணியம் கொலைதான்!' என்றன் ஜெனே. அந்த உலகில் கொலையாளியே பெரியோன். 'ரோஜாமயமான அற்புதம்' என்ற நூலில் கொலைக் குற்றத்துக்காகத் தண்டனை ஏற்பதற்குச் செல்லும் ஒருவனைப் பிணைத்திருந்த சங்கிலியை ஜெனே பார்க்கிறன். உணர்வின் தீட்சண்யமும் அளவற்ற அபிமானமும் அச்சங்கிலி ஒரு ரோஜா மாலையாக்கிய தரிசனம் ஜெனேக்குத் தென்பட்டது. ஜெனேயைப் பொறுத்தவரை ஒரு கொலையாளி அவ்வளவு மகத்தானவன்.

இந்த இலக்கியம் கலாசார மேதைகளைக் கதி கலங்க வைத்துள்ளது. அப்படியானல் எது நல்லது எது தீயது? மனித மனத்தின் ஆழ்ந்த ரகசியங்களை உதாசீனம் செய்துவிட்டுக் கூட்டு வாழ்வுக்கு ஏற்ற சௌகரியங்களை நல்லது—புண்ணியம் என்று கூறி அதோடு தேசபக்திக்காக நடக்கும் போரையும் புண்ணியம் என்கிறோம். ஜெனே இதே தர்க்கத்தில்தான் தனது கூட்டமான குற்ற உலகில் கொலையும் கொள்ளையும் தான் புண்ணியம் என்கிறன். இது உலகு முழுவதுமே உள்ள கலாசாரங்கள் யாவற்றுக்கும் விடப்பட்ட சவால்! இந்தச் சவாலை உணர்ந்து ஏற்றுக் கொள்ளும் கணத்தில் நமது மனதின் ஆழத்தில் புதுக் கிளர்ச்சிகள் பல எழுவதைக் காணலாம். இக்கிளர்ச்சிகளை ஏற்படுத்தும் இலக்கியத்தையே பேரிலக்கியம் என்கிறோம்.

ஆயுட் சிறைத் தண்டனை பெற்ற ஜெனேயைக் கலாசார உணர்வு மிகுந்த பிரெஞ்சு மேதைகள் ஒதுக்கிவிடவில்லை. மாருகத் தங்கள் சக்திகள் யாவற்றையும் பிரயோகித்து அவனை விடுவிக்க முயன்றனர். சார்த்ர் இவ்விஷயத்தில் முன் நின்றன் என்று குறிப்பிடத் தேவையில்லை. ஆனல் அவனைவிட அதிக செல்வாக்குள்ள ஜான் கொக்டு என்ற கவிஞன் தான் ஜெனேயின் விடுதலைக்காக அதிகம் உழைத்தவன். இதன் விளைவாக பிரெஞ்சுக் குடியரசுத் தலைவரின் மன்னிப்பு ஜெனேக்குக் கிடைத்தது. சிறையிலிருந்து அவனும் அவனது அற்புத சிருஷ்டிகளும் வெளிப் பட்டன.

ஜான் கொக்டு இவனை 'என்ஜெனே' என்று ஒரு இடத்தில் விளிக்கிறன. ஜெனே என்பது ஒருவகை அழகிய மலரின் பெயர்.

# தவறு

மௌனி

அவன், அன்றிரவு திடீரென விழிப்படைந்தவன் போன்று வழக்கமான நேரத்திற்கு முன்பே, அயர்வு நீங்கி எழுந்தான். தன் முன் வாழ்வெலாம் எவ்வெவ் விடத்தில் எவ்வெவ்வகை கொண்டதாகிறது என்று, கனவின் நிழலென, உணர்விற்கப்பால் தோன்றி மறையக் கண்டான் போலும். எங்கிருந்தெல்லாமோ 'கா' குருவிகள் அலறலும் ஆங்காங்கே எட்டிய வெளியில் புதைந்து, கேள்வி பதில்களென விபரங் கொள்ளக் காத்து நின்று ஆந்தைகளின் சீறலும் கேட்டன. இரண்டொருவர் நடமாட்டமும் அந்த அகால வெளியில், வீதி வழியே உலாவி வரும் மௌனத்தைக் குலைக்கா வண்ணம், கேட்டு மறைய இருந்தது. எதிரே, கீழே நடை பாதையில் முடங்கிக் கிடந்த பிச்சைக்காரர்கள் அயர்ந்து தூக்கம் கொண்டிருந்தனர். இரவில் வெகுநேரம், எதிரே தூக்கம் காண, அவர்கள் இரைந்து பேசிக் கூவி கொம்மாள மிட்டு இருமி இருமிச் செத்துக் கொண்டிருந்தவர்கள்... எவ்வளவு அமைதியான தூக்கம், விடிவு கொண்டு விழிப்பு வரும் வரையில்......

ஏன் தன் வாழ்வு, 'அவளுடன்' ஆரம்பித்த அந்த இனிமையுடன் முடிவு பெறவில்லை. ஏன் எதற்கு இவ்வகையில், நடுவில் குறுக்கிட்டு வந்து போனதான சம்சயம், நிச்சயம் கொள்ள வாழ்க்கை தொடருகிறது? உலகு அவளை எவ்வளவு ஏளனமாக ஏற்க, தன்னைக் கலந்து இன்பம் காண, என்பதில், கண்ட கண்ட இடத்தில் கண்ட கண்டவர்களை மகிழ்விக்க, தன்னை ஈனமாக்கிக் கொண்டவளா...? இவனுக்குப் புரியவில்லை. கேள்வி பதில் என்பதின்றியே, எதிரே இரவின இருள் கவிந்து இருந்தது. உள் ஜன்னலைத் திறந்து, பிடித்துக் கொண்டு, வெளியே பார்ப்பதில்தான் எல்லாம் இருக்கிறது. ஆகாயத்தில் எண்ணிலா தாரகைகள் வீதியில் பதிந்து பவனிவர சென்று கொண்டிருந்தன போலும்.

அன்று மாலை நிகழ்ச்சியை இப்போது நினைவு கூர்ந்து நிச்சயமடைய, நடக்க இருப்பதின் நீண்ட முன் சாயையும், பின் நடந்தவைகளின் மறைவு, மறதி பின் ஞாபகத்தையும் கலந்து கொள்ள வேண்டியிருக்கிறது. வீதியில் ஒரு சந்தின் குறுக்கீட்டின்போது அவனைக் காண நேர்ந்தது வியப்படைய இருந்தது. இவனைப் பார்த்து அவன், "என்னப்பா... இங்கே தானா... எப்போது, தெரியவில்லையே..." என்றது யதேச்சை குறுக்கீட்டு சம்பவமென இப்போது கொள்ள முடியவில்லை. வாழ்க்கை எவ்வளவு வசீகரமாக அவனுக்குப் போய்க் கொண்டிருக்கிறது என்பது ஒளிவு மறைவின்றி அவன் நடையுடை பாவனைகளில் மிளிர்கின்றது..... அவனுடன்தானே இப்போது 'அவள்' வாழ்கிறாள்...? இவன் விலாசத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு மறுநாள் மாலை சரியாக நாலரை மணிக்கு நிச்சயமாக சந்திக்க வருவதாகச் சொல்லி அப்போதைய அவன் அவசர ஜோலியில் போய்விட்டான். மாலை சூரியன் மங்கல் மஞ்சள் ஒளியும் அவ் வீதி வழியே படர்ந்து வசீகரமாகத் தோன்றி மறைவு கொள்ள ஆரம்பிக்கிறது.

தன் தனிமைமாடி அறையில், இவன் தங்கியிருந்த இடம், போதுமானதற்கு அதிகமாகவே இருந்தது. நாற்புற ஜன்னல்களுடன், எதிரே எட்டிய வெளியையும் கீழே ஊர் நடப்பையும் கவனிப்பு கொடுக்கும் வகைக்கு, அது வெகு உயரத்தில் மேன் மாடியில் இருந்தது. தடுக்கி விழக்கூடிய விதத்தில், செங்குத்தான அநேக படிகளைத் தாண்டி ஏறித்தான் தன் அறைக்குள் நுழைய வேண்டிய சிரமம், அதிகமாக கீழிறங்கி ஊர் சுற்றித் திரிந்து திரும்பும் இவன் ஆவலை, வேதனை எனத்தான் கொள்ளச் செய்யும். ஜன்னலைப் பிடித்துக் கொண்டு எட்டிய வெளியை நோக்கியிருந்தான்... காலையும், காண கண்டு கொண்டிருக்கிறது.

அன்று மாலை நான்கு மணியிலிருந்து அவன் வருகையில் கொள்ளும் ஆவலில், நேரமாகியும் அவன் வராதது கண்டு ஆத்திரம் கொள்ளலானான். அடிக்கடி கடியாரத்தைப் பார்த்தும் கொண்டிருந்தான். இன்னும நேரமாகவில்லை என்று சமாளித்துக் கொள்ளுவதில், எப்போது அவன் வருவதாகக் குறிப்பிட்டான் என்பதையும் மறந்து கொண்டிருந்தான் போலும். சில சில சமயம் யாருக்காக தான் காத்திருத்தல் என்பதும் விளங்குவது இல்லை. வீதி வழியே அநேக ஆடவ பெண்டிர் பிள்ளை குட்டியுடன் கடற்கரையை நோக்கி விரைந்து சாய்ந்து கொண்டிருந்தனர். தத்தம் தினசரி வாழ்க்கை அலுப்பை கடற்கரைக் காற்று வாங்குவதில் கரைய விட முடியும் என்ற எண்ணத்திற்குத்தான் எவ்வளவு அலங்காரங்கள் ஆர்ப்பாட்டங்கள்வேண்டிக் கிடக்கின்றன... இந்திர விழா எடுப்பென — மேலே ஆகாயம் நிர்மலமாக சூரிய மறைவிற்கு இருள் கொள்ளக் காத்திருந்தது. வீதி விளக்குகளும், ஏற்றப் படாமல் எட்டிய வரையிலும் நின்று தெரிந்தன.

நேரமாகி விட்டது. அறையின் அமைதி அச்சுறுத்தலாகி, உள்ளே இருப்புக் கொள்ள முடியாது கீழிறங்கி வீதியை அடைந்தான். அநேகரை ஆங்காங்கே கடக்கும்போது உன்னிப்பாய் வெறித்து நோக்கிச் சென்று கொண்டிருந்தான், ஒருகால் தன் எதிரிலேயே தெரியாமல் தன் நண்பன் தன்னைக் கடந்து செல்லக் கூடுமென்ற எண்ணம் போலும், எதிரே யாரோ ஒருவன் கையில் கட்டியிருந்த கடியாரத்தை இவன் கவனித்து, அவனருகில் சென்று திடுக்கிட நின்று, "ஸார், டைம்... கரெக்டாக?" என்று கேட்டான். இவனை ஒரு விதமாகப் பார்த்துக் கொண்டே அவன் தன் கடியாரத்தையும் பார்த்து விட்டு அடிக்கடி அதற்கு சாவி கொடுக்கத் தவறியதால் அது நின்றிருப்பதைக் குறிப்பிட்டு, "...ஏன் ஸார்... சரியாக நாலரை இருக்கும்" என்றான். "ஐந்துக்கு மேலாகாது" என்றும் சொல்லிக் கொண்டே அவன் போய் விட்டான். திரும்பி தன் அறையை அடையவும் தோன்றியது. ஒருக்கால் தன் நண்பன் அப்போதுதான் அங்கே வந்து, தன் அறையில் தன் நாற்காலியில் தன்னை எதிர்பார்த்து அமர்ந்து கொண்டிருக்க முடியும் எனவும், தான் குறிப்பிட்ட காலத்தில் வந்தும் தன்னை வெகு நேரமாகக் காத்திருக்கச் செய்த தன் தவறை அவன் சுட்டிக் காட்டிச் சொல்ல, அதை எப்படி சமாளிக்க முடியும் என்ற எண்ணத்தில், திரும்பும் நினைவை மறந்தான். வெளிக் கிளம்பும்போது பூட்டாதே தன் அறைக் கதவைச் சாத்தி வந்ததாகவும் ஞாபகம் வந்தது... மேலே வீதி வழியே போய்க் கொண்டிருந்தான்.

ஒரு பங்களா, சுற்றுச் சுவர் சூழ மத்தியில் தெரிந்தது. அதைக் கடக்கும்போது வராண்டாவில் ஒரு அழகிய பெண், அலுப்பு மிகுதி ஆனந்தத்தில், ஆவலுடன ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருப்பதைக் கவனித்தான். படிக்கும் பாவனையும் அவள் முகத்தில்

படர்ந்து தெரிந்தது. உள்ளே அவள் முன் சென்று சரியாக சொன்னபடி ஆறு மணிக்கு தான் வந்ததைச் சொல்லி அவள் அலுப்பிற்குத் தான் ஜவாப்பல்ல எனச் சுட்ட வேண்டுமெனத் தோன்றியதும், 'அவளாக' அவளுக்குத் தானாக முடியுமா என்ற சந்தேகத்தில் விழிப்படைந்து மேலே நடந்து கொண்டிருந்தான். எதிர்பாராச் சம்பவம், விபத்தென அடிக்கடி ஆபத்தில் சிக்க வைக்க, வாழ்வுதான், தவிப்பில் எவ்வளவு அபத்தமென பெரும்பாடாகிறது. குறுக்கும் நெடுக்கும் அநேக கார்கள் வீதி வழியே வேகமாக இவனைத் தொடும் அளவிற்கு உரசிச் சென்றுகொண்டிருந்தன. வீதி விளக்குகள் இன்னும் ஏற்றிய பாடில்லை.

எதிரில், தனக்குப் பால் விற்பவளை இவன் பார்த்து, சிறிது தயங்கியவாறு நின்றான். இவனைப் பார்த்து சிரித்துக் கொண்டே அவள், "எங்கே ஐயா... இவ்வளவு சீக்கிரமாக வெளியே... புதிசா... நான் வரதுகூட மறந்து..." என்றதும் அவளுடன் தன் அறைக்குத் திரும்ப எண்ணினான் மேலும், தன் நண்பன் தனக்காக அங்கு காத்து வீற்றிருந்தால், இருவரையும் அவன் பார்த்தால்... என்ற எண்ணம் எப்படியோ தோன்ற, அந்நினைப்பை மறந்தான். 'அவளையே போய் பாலை ஊற்றச் சொல்லவும் தயங்கி "இன்று வேண்டாம். நீ ரூமுக்கும் போக வேண்டாம்..." என்று சொல்லி மேலே அவள் சிரிப்பில் 'பாவம் என்னிடம் எவ்வளவு பிரியம்' என மிதந்து நடந்துகொண்டிருந்தான்.

குறிப்பற்ற போக்கில் போவது, நிச்சயமாக வேண்டி, எல்லை விரிந்த வெளியென எங்கெங்கேயும் ஒளிகிறதாகிறது. எதிரே ரயிலடி ஆயிரம் விளக்கொளியில் நிற்கக் கண்டான். சிறிது எட்டி நின்று பார்த்திருந்து, பிறகு அதன் ஈர்ப்பில் அதனூடே கும்பலில் ஒருவனாக எப்படி எப்போது கலந்தான் என்பது இவனுக்கு விளங்கவேயில்லை.

ரயிலடியே ஒரு அலாதி அநாதைப் பார்வை கொடுப்பது. அதன் வெறிச்சோட்டத்திலும் கும்பலிலும் மனிதர்கள் ரயில் வண்டியில் வந்து போவதற்கு சிறிது அது ஒரு தங்கும் இடம். ஆனால் இந்தப் பெரிய புகை வண்டி நிலயம், வண்டிகளில் பிரயாணம் செய்பவர்களுக்கு ஒரு ஆரம்ப முடிவு ஸ்தலம்—டெர்மினஸ் இங்கிருந்து ஆரம்பிக்கும் பிரயாண தொடர்கள் எங்கேயோ எப்போதோ எட்டுத் திக்குகளுக்கும் சென்றடைந்து, சிறிது தாமதித்து நின்று திரும்பவும் இங்கு வந்தடையும், நாலாபக்கத்து ஜனங்களும் இங்கிருந்து கிளம்பவும், ஆங்காங்கிருந்து வந்தடைய கூட்டுறவு கொள்ளுதலும் இங்கேதான். அநேக குண விசேஷங்கள் விட்டுப் பிரிந்து தவறுதலில் அநேகரை மாற்றடைவது நேருமிடம். ...ஆக இந்த ஆரம்ப முடிவிடம் எவ்வளவு கும்பல் கூச்சலையும் சமாளித்து சலனமற்ற ஒரு உன்னத மௌனப் புதிர் க்ஷேத்திரம். அவ்வேளையில் அங்கே வெகு ஜனக் கும்பல். ஏதோ வந்த ஒரு ரயிலில் இருந்து இறங்கியவர்களும், போவதான ஒன்றுக்குக் காத்திருப்பவர்களும் ஒன்று சேர்ந்து அநேக தவறுதலுக்கான பாவனை கொண்டிருந்தது. கூச்சல்கள் யாராரிடமிருந்து வருகிறதென்பதன்றி தானும் சேர்ந்ததான ஒரு பிரமை கொள்ளவும்... 'உருவங்கள் தெரிந்தும் மறைந்தும், சப்தங்கள் கேட்டும் கேட்காமலும், எல்லா சந்தடிகளும் ஒரு அலங்கோலத்தில் ஒரு புலனாகா நியதியில் அவதி கண்டு சிதறித் தெரிந்தன. இந்த உரு, இந்த சப்தம், இந்த பெயர் என்ற இசைவு முறை நழுவ தனித் தனியாகத் தோன்றும் புலனுணர்வுகளை மனது ஒப்புக் கொள்ள முடியவில்லை...'

அங்கிருந்து புறப்பட இருக்கும் ஒரு ரயில் வெகு காலமாக பிரயாணத்திற்கு ஆவல் தூண்ட காத்திருந்தது போலும். அதில் செல்ல நினைத்தவர்கள் கண்ட கண்டபடி இடம் பிடிக்கும் ஆர்வத்தில் அதை மொய்த்துத் திரிந்தனர். நெருக்கியடித்து ஏறியவர்களும் மேலும் எவர் எவரும் படிக்கட்டுகள், ஜன்னல் பிடிப்பு மற்றும் மேன் கூறையிலும்கூட ஏறியிருந்தனர். சிலர், ஸ்டேஷன் கம்பங்களிலும். மேல் பிளாட் பாரத்திலும் ஏன் ஸ்டேஷன். கூறையிலும் கூட ஏறி ஆவலைத் தணித்துக் கொண்டிருந்தது, ஒரு குருட்டு குரங்குத் தனமான விளையாட்டெனத் தோன்ற இருந்தது... என்ஜின் கோர்க்கப்பட்டு பூதாகரத்தில் புகையைக் கக்கி நின்றது, செல்ல ஆயத்தம் கொண்டு நகர முடியாது முக்கித் திணறி பெருமூச்சில் உறுமியது. அந்த வண்டித் தொடர், ஒரு ஜனக் கதம்பத் தொடுப்பு வடமெனத் தோன்றியது.

சீக்கிரமே வேறு வண்டி புறப்பட இருப்பதை அறிவித்து விட்டு, கூட்டத்தைக் குறைக்க போலீஸ்காரர்கள் முனைந்தனர். கண்ட கண்டபடி அநேகரை இழுத்து அடித்துத் துரத்தினர். ஒரு புறம் ஓடியவர்கள் மறுபுறமாக ஆங்காங்கே தொத்திக்கொணடனர்.

இரண்டொரு முன் பின் குலுக்கலில் திடீரென வண்டி வேகம் கொண்டு ஓட ஆரம்பித்தது. உதறி விழுந்த அநேகர் அதில் தொற்றிக் கொள்ள முடியாமல் அத்துடன் ஓட ஆடம்பித்தது. உதறி விழுந்த அநேகர் அதில் தொற்றிக் கொள்ள முடியாமல் அத்துடன் ஓடி, களைத்து நின்றார்கள். இந்தச் சந்தடியில் தன்னை அறியாதேவண்டியில்புகுந்தது எவ்விதம் என, இவனுக்குப் புரிய வில்லை. ஒரு சாமான் வைக்கும்மேன் தட்டில் ஒண்டி கூனிக் குறுகி உட்கார்ந்திருந்தான். தன் முழங்காலையும் கட்டி அதன் மேல் தலை வைத்துத் தூங்கியும் விட்டான். எங்கெங்கேயோ கண்ட கண்ட விடங்களில் ரயில் நின்ற போதும், ஊர்ந்து சென்ற போதும் அநாவசிய பிரயாணம் கொண்டவர்கள் அவசியமென இறங்கி, இரவின் இருளில் மறைந்தனர். இட வசதி கண்டு காலை நீட்டி, நன்றாகத் தூங்கி விழித்த விதமும் புரியாதுதான் எழுந்து உட்கார்ந்தான். எங்கேயோ தடுமாறியதான ஒரு கனவுத் தோற்றமாய் உணர்ந்தவன், தானே ஒரு கனவுத் தோற்றமெனவும் கண்டான் போலும்.

தன்னையே விழி கொட்டாமல் கீழிருந்து பார்த்துத் தூங்கி வழியும் ஒரு முகத்தில் ஏளனப் புன்னகை கண்டு விழித்து அவனுடன் பேச ஆர்வம் கொண்டான்.

"ஸார், நாம் தூங்கும் போது, டிக்கட் பரிசோதகர் வந்து போய் விட்டார் ஸார். நம்மைப் பார்த்து, நம் நடையுடை பாவனையைக் கவனித்து டிக்கட் வாங்கியதாகக் கருதி கேட்காமலே போய் விட்டார் ஸார்...இனி வரமாட்டார் ஸார்..."

இவன் தன் பையைத் தடவிக் கொண்டான். பையில் டிக்கட் இல்லாதது நிச்சயமாகத் தெரிந்தது தான் வாங்கியதோ வாங்காததோ மேலும் பிரயாணம் செய்வதோ ஒன்றும் ஞாபகம் வரவில்லை. ஒருக்கால் தான் வாங்கியிருந்தால் இவன் ஏன் பிக் பாக்கெட் அடித்திருக்க முடியாதென்ற சந்தேகமும் இல்லாமல் இல்லை...மறு ஒருதரம் அவர் வந்தால் வருவதற்குமுன் எங்கேயாவது போய் விட வேண்டுமென்ற எண்ணத்தில் தன் தலைமயிரைப் பிடித்தே தன்னைத் தூக்கிக் கொண்டு சென்று விட முடியும் என, கோதிக் கொண்டான் போலும்,

நிற்காத ஒரு சிறிய ஸ்டேஷன் வெளிக்கைகாட்டி காட்டவில்லை போலும். ஒரு அத்வான வெளியில்

சிறிது அது நிற்க ஊர்ந்து கொண்டிருந்தது. வேகம் கண்டு. நிற்குமுன்பே அவசரமாக, வெகு லாகவமாக இறங்கலானுன். தடுக்க அவனிடம் சாமான் சச்சுகள் இல்லை. வண்டி நின்று, போனவுடன் அந்த இரவின் இருள் சூழ்ந்த வெளியில் கூர்ந்து சுற்றும் முற்றும் கவனிப்பு கொண்டபோது, தன்னைப் போல் யாருமில்லை என அப்போது உணர்ந்தான்.

அந்த இரவு இருள் வெளியில், கண்ட இருளானது மிகப் பிரகாசமாகத் தெரிந்து ஏனைய தோற்றங்கள் கொள்ளவும் ஏதுவாகியது. அடிக்கடி இவ்வித ஒளியும் இருளாகியது. உடல் தனித்த ஆவி, வாசனை கொண்டு அருபத்தில் அலற, பயங்கரம் தொனிக்கக் கேட்கிறது. இருள், மறைவு, ஒளி, இசைவு முறை நியதியினின்றும் நழுவியது போலும். தறிதலை என குதிக்கும் சேவல், இருளில் முண்டம் காணுது, கண்டவைகளில் சார்ந்து பொழுது புலர கூவியது விநோதமாகக் கேட்டது. கொஞ்சம் வெளிச்சம்காணு முன்பிருந்து பனி, தென்னை, ஆடு, மாடு, நாயெனவும் ஏன், மனிதனுகக் கூட இச் சேவலின் விடிவைக் கூவ முடியாது? ஆதாரம் தெரிந்தும் தவறை (பிரலம) தவிர்ப்பது எப்படி...தவறென உலகைக் காண்பதில் தான் போலும்...

காலை ஒளி காணும் சிறிது முன்பே பால்கொடுக்க வந்தவள் கதவைத் தட்டி கூப்பாடு போட்டும் இவன் எழுவதாக இல்லை ..யாரோ ஒருவன் கனவின் சாயையென, தன் கனவில் உலகைக் கண்டு களித்திருந்தான் போலும். யார் யார் காதிலோ இந்தக் கூப்பாடு கேட்டும் இவன் காதில் விழாது, இவனுக்காக இனி காத்திருத்தல் தவறென, பால் விற்பவள் சென்று கொண்டிருந்தாள்... ●

---

# பார்க்கப் போனல்....

**வல்லிக்கண்ணன்**

**நா**வலாசிரியன் பால்ஸாக்கின் வாழ்க்கை வரலாறு ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தேன். (The Wine of Life Charles Gorham) ரசமான புத்தகம் அது.

பால்ஸாக் வரலாற்றை எவன் எப்படி எழுதினுலும் சுவையாகத் தான் இருக்கும். அவன் வாழ்ந்த விதம் அத்தன்மையது.

பதினைந்து வருஷங்களுக்கு முன்பு, ஸ்டீபன் ஸ்வைக் எழுதிய 'பால்ஸாக்' என்றெரு பெரிய புத்தகத்தைப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. உயர்ந்த முறையில் எழுதப்பட்ட அருமையான வரலாறு அது. அவ் வரலாறு என் உள்ளத்தில் சில பாதிப்புகளை உண்டாக்கியது. கால ஓட்டத்தில், அப் பாதிப்பினுல் நான் பயன் அடைந்தது உண்டோ என்பது வேறு விஷயம். என் சொந்த விவகாரம் அது.

இப்போது நான் படித்த புத்தகம் எழுதப்பட்டுள்ள முறையே வேறு. தற்கால நூல்களில் (எழுத்தில்) காணப்படுகிற தாராளத்தனம்— ஒளிவு மறைவு இல்லாமல், எதையும் சொல்ல வேண்டியது தான் என்கிற வேகம்—இவ் ஆசிரியர் எழுதிச் செல்லும் முறையில் அதிகமாகவே இடம் பெற்றுள்ளது.

பால்ஸாக் வாழ்க்கை பற்றியோ, கார்ஹம் எழுத்துச் சுவை பற்றியோ இங்கு நான் குறிப்பிட வரவில்லை.

(இந்தப் புத்தகத்தை இலக்கியப் பிரியர்கள் படிக்க வேண்டும். எவரும் ரசிக்கக் கூடிய இனிய புத்தகம் இது.)

இதில் உள்ள இரண்டு இடங்கள் பத்தொன்பதாம் நூற்றுண்டு பிரஞ்சு எழுத்துலகம், பத்திரிகை உலகம் இருந்த நிலையை எண்ண வைக்கிறது. இருபதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தமிழ் நாட்டில் நிலவுகிற நிலை மாதிரித்தான் அது இருந்திருக்கிறது என்று நினைக்கத் தூண்டுகிறது.

எந்த நாட்டிலும், ஏதாவதொரு காலகட்டத்தில் இப்படிப்பட்ட நிலைமை இருக்காமல் போகாது. ஆனுல் தமிழ்நாடு கும்பகர்ணத்தனத்தில் ரொம்ப காலம் ஈடுபட்டு இருந்திருக்கிறது என்பது முக்கிய பாயின்ட்.

இதோ பால்ஸாக் விவகாரத்துக்கு வருகிறேன்—

அவன் பிரபல பத்திரிகை ஒன்றுக்கு நாவல் எழுதித் தர இசைந்தான். அவனுக்கு எப்பவுமே பணத்தேவை மிகுதி. எப்பவும் 'தலைக்கு மேலே' கடன்தான். அதுமாதிரியான ஒரு நெருக்கடியின் போது, நாவலின் சில பகுதிகளைக் கொடுத்து விட்டு, பெரும் தொகை வாங்கிக் கொண்டான். மீதிப் பகுதிகளையும் எழுதித் தந்த பிறகே நாவலை பத்திரிகையில் பிரசுரிக்க வேண்டும் என்று சொன்னுன். பத்திரிகை ஆசிரியரும் சம்மதித்தார். ஆனுல், அவன் எழுதிக் கொடுக்க அதிகமான காலதாமதம் ஏற்பட்டது. முதல் பகுதியை அச்சிட்டு விட்டால், அவன் தொடர்ந்து எழுதி முடித்துவிடுவான் என்று நினைத்து பத்திரிகை ஆசிரியர் பிரசுரம் செய்து விட்டார்.

பால்ஸாக் கோபம் கொண்டான். ஆசிரியருடன் தகராறு செய்தான். 'நான் ஒரு கலைஞன். எனக்குச் சில உரிமைகள் உண்டு. உம்மைப் போன்ற ஆசாமிகள் அவற்றில் தலையிடுவது அபாயமாகும்' என்று கத்தினுன்.

இருவருக்கும் சண்டை முற்றியது. 'நான் இனி ஒரு வரி கூட உம் பத்திரிகைக்கு எழுதித் தரமுடியாது முன் தந்த பகுதியை தொடர்ந்து வெளியிடவும் கூடாது' என்ருன் பால்ஸாக்.

'நான் நாவலுக்கு விலை கொடுத்தாச்சு. அதை நான் என்னவும் செய்வேன். கோர்ட்டில் பார்த்துக் கொள்வோம்' என்ருர் பத்திரிகைக்காரர்.

கோர்ட்டுக்கும் போனுர்.

அக் காலத்தில் அவருக்கு இருபெரும் பத்திரிகைகள் சொந்தமாக இருந்தன. அதனுல் பிரான்சின் எழுத்தாளர்கள் மீது அவர் ஆதிக்கம் செலுத்தி வந்தார். செல்வாக்கு மிகுந்த இரண்டு பத்திரிகைகளின் தயவு இல்லாது எழுத்தாளர்கள் வாழமுடியாது என்ற நிலை இருந்தது. எனவே அந்த அதிபர் எழுத்தாளர்களை ஆக்கவும் அழிக்கவும் வல்லமை பெற்றிருந்தார்.

அதைத் தகர்க்க வேண்டும் என்று திட்டமிட்டான் பால்ஸாக்.

'நமக்கு என்று நம் சொந்தப் பத்திரிகை ஒன்று வேண்டும். அதற்கு எழுதுகிறவர்களால் நடத்தப்படு

(10-ம் பார்க்க)

## மூன்றாவது கை

ஒரு நாள்
பயந்த நெஞ்சுடன்
அவலக் குரலுடன்,
அதனினும் அதிகமாய்த்
துளிர்த்த விழிகளுடன்
நான் சொன்னேன்:

என் கையைப் பற்றிக்கொள்.
ஏனெனில்,
என் வாழ்க்கைப் பாதையின் துன்பத்தைத்
தனியாய் சகிக்க இயலாது.
நீயுந்தான் யாரிடமேனும்
இதையே சொல்ல நினைத்திருப்பாய்;
தனிமைப் பாதை
உன்னையும் உறுத்தியிருக்கும்.
ஆனால், என்னைப் போல் நீ
பயந்த வார்த்தை பகர்ந்திடவில்லை;

சரி, வாழ்க்கையில்
ஏற்ற, இறக்கம் நாமும்
ஏராளம் கடந்துவந்தோம்.
இருட்டு, வெளிச்சம்
புயல், மழை, வெளிச்சம்
சேர்ந்தே சகித்தோம்.
காலத்தின் நெடும் பயணத்தில்
ஒருவர் மற்றவர்க்கு
உதவியாய், துணையாய் இருந்தோம்.

ஆனால்,
தள்ளாடும் கால்களுடன்,
நானும் நீயும்
ஒருவர்க்கொருவர் போதுமாயில்லை,
வேறொரு மூன்றாவது கை
எனதையும் உன்னதையும்தாங்கிட வேண்டுமென
ஒப்புக் கொள்வதில்
நாணமென்ன நமக்கு?

இந்தி மூலம்: டாக்டர் பச்சன்

தமிழில்: கோ. ராஜாராம்

## பாவக் குழந்தை

என் மனைவியின் தோழி
அழகின் அவதாரம்
அவள் குழந்தை
புட்டியில் வளர்ந்த
பாவக் குழந்தை.

எனது மனைவியும்
அழகில் சளைத்தவளல்ல.
தோழியைப்
பழித்தவள்
பாலே கொடுத்தாள்.
பாவக் குழந்தைக்குப்
பால்தான் இல்லை.

—அம்பைபாலன்



ஓவியம்: கருணாகரன்

## ஹமார்பாரி, துமார்பாரி, நோக்ஷல்பாரி

என் இடம், உன் இடம் நோக்ஷல் பாரி

போய் பணம் கொண்டு வா
போய் பணம் கொண்டு வா.
இன்னும் ஒருநாள் என் வசமில்லை.
சோறும் குழம்பும் ஆக்குவதற்குப்
போய் பணம் கொண்டு வா
போய் பணம் கொண்டு வா.

வேலையற்று வெறித்து நோக்கு.
நகரத் தெருக்களில் பிரமாதங்கள்
விரைந்து போகும்; விரைந்து வரும்.

உன்னுடைய பட்டினி
குழிந்த
உன் தலையினுள் இன்னும் தொடரும்.

உன்னுடைய இதயத்தின்
இடையறு ஓசை
ஓயத்தொடங்கும்.
உன்னுடைய சாமான்
சலித்துக் தொங்கும்.

அசைவற்று, பசியுடன்,
அழுக்காய் இருக்கும் நீ
பிறப்பு என்ற, சாவு என்ற
இரு பெரும் எல்லைகளை
மீறத் துணிந்தாய்.
உன்னுடைய சட்டைப்பையில்
காகிதத்துண்டுகள்,
ஆணிகள்,
தீப் பெட்டி.
சிலுவையில் அறையவோ?
சிதையில் வைக்கவோ?

ஹமார் பாரி, துமார் பாரி, நோக்ஷல் பாரி.

—ஐராவதம்

## தேரோட்டம்

காடெ, கோழி வெச்சுக்
கணக்காக் கள்ளும் வெச்சு
சூடம் கொளுத்தி வெச்சு
சூரன் சாமிகிட்ட
வரங்கேட்டு வாரீங்களா
ஆரோ வடம்புடிச்சி
அய்யன் தேரு நின்னுடுச்சி

கற்கண்டு வாழை வெச்சு
விருட்சிப் பூவ வெச்சுப்
பொங்கல் மணக்க வெச்சு
வடக்கன் சாமி கிட்ட
வரங்கேட்டு வாரீங்களா
ஆரோ வடம்புடிச்சி
அய்யன் தேரு நின்னுடுச்சி

இளநீ சீவி வெச்சு
இரும்பாக் கரும்பு வெச்சு
குளிராப் பால வெச்சுக்
குமரன் சாமி கிட்ட
வரங்கேட்டு வாரீங்களா

தெரு ஓடும் தூரமின்னும்
வடமோடிப் போகலியே
வடம் போன தூரமின்னும்
தேரோடிப் போகலியே

காலோயும் அந்தியிலே
கண்தோற்றம் மாறையிலே
ஆரோ வடம் புடிச்சி
அய்யன் தேரு நின்னுடுச்சி

— ஞானக்கூத்தன்

## நான்

எடுத்த நாள் தொட்டு
எத்தனையோ ஆண்டாக
இந்த உடற்பாரம்
இறக்காது தூக்கிவரும் நான்
ஓர் *'வெயிற் லிப்ரிங் சாம்பியன்'

—சி. சத்தியமூர்த்தி

*(Weight - Lifting champion)

## விடலைகள்

துள்ளித் துவண்டு
தென்றல் கடக்க
விஸில் அடித்தன
மூங்கில் மரங்கள்

—பாலகுமாரன்

## செருப்புக்கள்

நாங்கள் பிறந்த
உடனே
இணைந்து விட்டோம்
அந்தப் பாவத்திற்காகக்
காதலிக்கத் தொடங்கும் போது
அடிமைகளாகி விட்டோம்.

மனிதர்கள் உறங்கும்போதுதான்
எங்களால்—சிரித்துப் பேசிச்
சேர முடிகிறது.

மீதி நேரங்களில்,
ஒரே பாதையில்,
ஒரே திசையில்
அருகருகே போனாலும்
அணைத்துக் கொள்ள
முடிவதில்லை.

எங்கள் வாலிபத்தை
மனிதர்கள் மிதித்தே
சிதைத்து விடுகிறார்கள்.

வீதிகளே சொந்தமான்
விபச்சாரிகள்,—நாங்கள்
வீடுகளுக்குள் புகவே
முடியாது!

—தி. க. கலாப்ரியா

## நிழல்கள்

விரல்களை சுருட்டி பிரித்து
வாழ்வின் முறையை விளக்கினர் வகுத்து
விரல்களின் நிழல்கள்
சுவற்றில் விழுந்தன
வேறுவேறு வல்லூறுகள்

—ந. மகாகணபதி

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

கிற ஒன்று அது. எழுத்தாளர்களைச் சுரண்டிப் பிழைக்கும் அதிபர் எவராலும் உரிமை கொண்டாட முடியாதது' என்று அவன் வலியுறுத்தினன்.

'எழுத்தாளர்களின் கற்பனையில் ஓயாதுஉறுத்திக் கொண்டிருக்கும் ஒரு எண்ணம் இது. எப்பவும் சோக மான விளைவுகளுக்கே இடமளிக்கும் ஒரு எண்ணம்' என்று வரலாற்று ஆசிரியன் எழுதிச் செல்கிருன்.

பால்ஸாக் பெரிதும் முயன்று ஓரளவு பணம் திரட்டி, பழைய பத்திரிகை ஒன்றை வாங்கினன். தகுந்த உதவியாளர்களைத் தேடிக் கொண்டான். ஆரம்ப விழாவின்போது சொன்னன்—

'நாம் எழுத்தாளர்கள். எழுதிக் கொடுக்கிறோம். நமது உழைப்புக்குப் பிரதியாக அல்பக் காசு நமக்குத் தரப்படுகிறது. பத்திரிகைக்காரன் நம்மால் செல்வாக்கு பெறுகிருன். அவன் பலம் ('பவர்') சேர்த்துக் கொள்கிருன். இன்று பிரான்சில் பவருக்குத்தான் அதிக மதிப்பு இருக்கிறது. நீ பவர் சம்பாதி. மக்கள் உன்னையும் போற்றிப் புகழ்வார்கள். பிரசுரகர்த்தர்களும் பத்திரிகை அச்சிடுபவர்களும் எழுத்தாளர்களாகிய நம்மை மதித்து, நம்மைச் சார்ந்து வாழும்படி நாம் செய்ய வேண்டும். அவர்கள் ஆதரவில் நாம் வாழ்கிரும் என்று இருக்கக் கூடாது. எத்தர்களும் சுரண்டல் வாதிகளும் நிறைந்த ஒரு கும்பல் இன்றையப் பாரிஸில் பொதுஜன அபிப் பிராயத்தை உருவாக்கி வருகிறது. அதை நாம் தகர்க்க வேண்டும். நீங்களும் நானும் நமது பாரிஸ் கிரானிக்கிள் மூலம் அதை சாதிக்கத் தான் போகிறோம்.'

இந்தப் போராட்டத்திலே, அந்நாளில் பிரசித்தி பெற்ற எழுத்தாளர்களாக விளங்கிய ஹ்யூகோ, டூமாஸ், ஜானின், ஸெயின்ட்போவ் போன்றவர்களின் ஆதரவு தனக்கு நிச்சயம் கிடைக்கும் என்று பால்ஸாக் எண்ணினன். ஏமாந்தான்.

பின்னெரு சந்தர்ப்பத்தில் அலெக்ஸாண்டர் டூமாஸ் அவனிடம் சொல்கிருன்:

'பத்திரிகை அதிபர் தான் நமக்குரொட்டியும் வெண்ணெயும். அல்லது நமது ரொட்டிமீது சேர்கிற வெண்ணெய் என்று வேண்டு மாஞல் சொல்வோமே. நல்ல அறிவு உள்ள எவனும் தனக்குச் சாப்பாடு தருகிற கையைக் கடிக்க மாட்டான்.'

'கிடைக்கிற துண்டு ரொட்டியைத் தொடர்ந்து அடி கிடைத்தால் கூடவா?' என்று பால்ஸாக் கேட்க,

'அப்ப கூடத்தான். ஒருவன் சாப்பிடா விட்டால், பட்டினி கிடக்க நேரிடுமே' என்று டூமாஸ் சொல்கிருன்.

பல வருஷங்களுக்குப் பிறகு, பால்ஸாக் அற்புதப் படைப்புகளின் ஆசிரியன் என்று பெயர்பெற்றுவிட்ட பின்னர், அவனது புகழைப் போலவே கடன்களும் ஓங்கி வளர்ந்திருந்த கட்டத்திலே, அவன் மனநிலை இருந்த விதம் பற்றி வரலாற்று ஆசிரியன் கூறியிருப்பது நினைவில் நிறுத்தத் தக்கது.

எழுதும் மேஜை முன் அமர்ந்துள்ள நேரத்தில் பால்ஸாக் தன்னிலும், தனது படைப்பிலுமே நம்பிக்கை வைப்பது வழக்கம். வேறு எதிலும் அவன் நம்பிக்கை கொள்வது இல்லை. அவன் உண்மையை, அவன் கண்டறிந்தபடி, சொன்னன். வாசகர்களின் விருப்பு வெறுப்புகள், மனச்சார்புகள் பற்றிக் கவலை எதுவும் கொள்ளாது எழுதினன். பரபரப்பு உண்டாக்க வேண்டும் என்பதற்காக அதிர்ச்சிகளில் ஈடுபடவில்லை, அவன். ஆனல், இனிப்பு தடவிய வரலாறும், வாசனை பூசிய வாழ்க்கைக்கதையும் தேவை என ஆசைப்படுகிற பொதுஜன ருசியை திருப்தி செய்வதற்காக எழுதிய டூமாஸையும், அவனுடைய தாசர்களையும் பால்ஸாக் வெறுத்தான்.

அவன் ஒரு கலைஞன்; உறுதியான, உண்மையான கலைஞன். உண்மையை, உள்ளது உள்ளபடி, சொல்வதே அவன் மேற்கொண்ட பணி.

ஒரு புத்தகம் எழுதப்பட்ட பிறகு, அது அச்சாகி, பைண்டாகி, அதை விற்பனை செய்வது என்பது வேறு விஷயம். அதற்கும் கலைக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது.

பப்ளிஸிட்டியின் சக்தியில் பால்ஸாக் நம்பிக்கை வைத்திருந்தான்.

ஒரு புதிய புத்தகம் பற்றி பலவிதமான, பரபரப்பான, வதந்திகள் பரவி, அதனல் ஜனங்கள் அதை ஆவலோடு வாங்கி வாசிக்கிருர்கள் என்ருகுமானல்—

வாசிக்கட்டுமே! அதனல் என்ன கெட்டுப் போகிறது? எழுதப்படுகிறவை வாசிக்கப்பட வேண்டும்.

"வாசகர்களைப் பெற்றிராத புத்தக ஆசிரியன் ஒன்றுமே இல்லை. அவனுடைய திறமைகள் எவ்வளவு தான் உயர்வானதாக இருந்தால் என்ன? அவன் எழுதுவது லிட்டரரி மாஸ்டர்பேஷன் தான்" என்று பால்ஸாக் தியாபேல் காத்தியரிடம் அறிவித்தான்.

"பப்ளிக் என்பது சபலசித்தமுடையது. நல்ல ருசி பெருதது. மடத்தனமானது. கஞ்சித்தனம் கொண்டது. என்ருலும் அது பப்ளிக். ஆசிரியனின் படைப்பு நரம்புகளில் ரத்தம் ஓடவைக்கும் இரண்டாவது இருதயம் அது தான். It must be bullied, cajoled, coaxed, flattered, frightened, dragooned, conscripted, blackmailed, fooled, threatened, in order to make it read books and keep on reading books" என்றும் அவன் தெரிவித்தான்.

பால்ஸாக் சொன்னதாக கார்ஹம் எழுதியுள்ள வரிகள் இன்றையத் தமிழ் நாட்டின் 'பப்ளிக்' விஷயத்திலும் பொருத்தமுடையது தான் என்றே நான் கருதுகிறேன்.

---


# கசதபற

தனி இதழ்: 30 காசு

ஆண்டுச் சந்தா: ரூ. 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7 தேதிக்குள் 'கடசதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன் தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப்பெற போதிய தபால் தலையுடன் அனுப்பிவைக்கவும்.

ஆசிரியர் 'கசடதபற'
1 தேவடி தெரு
சென்னை 4

# பூட்ஸைக் கழற்றி

நா. ஜெயராமன்

அவன் மத்தியான பொழுதிற்கே உரித்தான சோம்பேறித்தனம் ஆட்கொள்ள அப்படியும், இப்படியுமாக நடந்து கொண்டிருந்தான். பெஞ்சுக்கு அடியிலிருந்த பூட்ஸ் கண்ணில் பட்டது. பெஞ்சுக்கு அருகே போய் பூட்ஸைக் கையில் எடுத்தான். அதில் படிந்திருந்த தூசி கண்ணை உறுத்தியது. பூட்ஸுக்குள் இருந்த கிழிசல் துணியை எடுத்துப் புழுதியைத் துடைக்க ஆரம்பித்தான்,

பெரிது பெரிதாகக் கட்டம் போட்ட அந்த சட்டைத் துணியை வாங்கிவந்து அம்மாவிடம் காண்பித்து, 'எப்படியிருக்கு?' என்று கேட்டபோது அவள் சிறிது தயக்கத்துடனேயே கேட்டாள்.

'உனக்கு இது தோதுபடுமா?'- ஒருநாள் அதைப் போட்டுக்கொண்டு வாசல்வரை போய்விட்டவன் திரும்பிவந்து இரண்டு மூன்று நாட்கள் போட்டு உபயோகித்த கசங்கிய சட்டை ஒன்றை மாட்டிக்கொண்டு போனான். மீண்டும் ஒருநாள் சலவை மடிப்புடன் அந்தச் சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டான்.

'ரொம்ப ஏறிப்போனாப்போல இருக்கு. இனிமேல் இந்தச் சட்டையைப் போட்டுக்க முடியாது. நல்ல சட்டை! அதுக்குள்ளேயும் சின்னதாகப் போய்த் தொலைந்து விட்டது!'

'முழுசாக மூணு நாள் போட்டுண்டு இருப்பியா?' — அம்மா சிரித்துக்கொண்டே கேட்டாள்.

பூட்ஸை எத்தனை தடவைகள் போட்டுக் கொண்டிருப்போம்? தெளிவாகவே நினைவிருக்கிறது. ஒரு திங்கட்கிழமை. பின்னர் இருபது நாட்கள் இடைவெளி கழித்து ஒரு புதன் கிழமை; அதற்குப் பிறகு இருபது நாட்களுக்கு மேலேயே இருக்கும். ஒரு வெள்ளிக்கிழமை அணிந்து கொண்டதாக ஞாபகம். அன்றுகூட போஸ்ட் ஆபீஸுக்குப் போய் செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருந்தன. அதற்கு அடுத்த நாள் பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பி விட்டான். அன்று பூட்ஸைக் கழற்றிவிட்டுக் கால்களை உதறிக்கொண்டு கூடத்தில் நடந்தபோது பிணைத்துக் கொண்டிருந்த சங்கிலியை அறுத்து எறிந்துவிட்டு மதம் கொண்ட யானை இஷ்டம்போல ஓட்டம் எடுப்பது ஞாபகத்திற்கு வந்தது

இனிமேலும் இழுத்துப் பிடித்துத் தைக்க முடியாது என்கிற அளவிற்கு வலதுகால் செருப்பின் குதிகால் பகுதியும், இடது கால் செருப்பின் கட்டைவிரல் வளைவும் நைந்திருந்தன. வழக்கமாகத் தைக்கின்ற சக்கிலியன் வேறு வெற்றிலைக் குழம்பை ஓர் அடி தூரத்திற்கு தூவென்று துப்பிக்கொண்டு, 'என்ன சாமி இது?' என்று பல்லைக் காட்டினான். இன்று எப்படியும் செருப்பு வாங்கிவிட வேண்டும் என்ற வேகத்துடன் காப்பி, டிபன் சாப்பிட்டு ஆசுவாசப் படுத்திக் கொண்டதும் யாரிடமும் சொல்லாமல் பணத்தை எடுத்துக்கொண்டு கிளம்பினான். நடந்து போய்கொண்டிருந்தபோது, 'இந்தத் தடவை பூட்ஸ் வாங்கலாமா?' என்று சாதாரணமாகத் தோன்றிய சபலம் கடையை நெருங்க நெருங்க, பூட்ஸா? செருப்பா? என்று அவன் முடிவு கட்டமுடியாத பெரும் பிரச்னையாக மாறிவிட்டது. சாலையில் நிறைய கால்களை உற்றுப்பார்த்தான். அவனைப்போல பத்து பேர்களைத் தவிர மீதி நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் பூட்ஸை சர்வசாதாரணமாகப் பயன் படுத்துகிறார்கள் என்ற உண்மை வலுப்பெற்றது. கடையில் நுழைந்து வரவேற்பை ஏற்று நாற்காலியில் உட்கார்ந்தபோது கூட எதைக் காட்டச் சொல்வது என்று அவனால் தீர்மானிக்க முடியவில்லை.

"சாருக்கு ஷூவா செப்பலா?"

"நான் எப்போதும் இங்கேதான் வாங்கறது."

"எனக்குத் தெரியாதா சார்?"

"ரெண்டும் ஒரு Pair வாங்கிப் போட்டுடுங்க சார். Two or three yearsக்கு worry பண்ணிக்காமல் இருக்கலாம்."

"ஏதாவது ஒண்ணு போதும்."

"நான் இப்பதான் மொதன் மொதலா ஷூ போடப்போறேன். ரொம்ப ஹெவியா குடுத்துடாதீங்க."

"நான் அப்படியெல்லாம் குடுத்துடுவேனாசார்! இதை எடுத்துக்குங்க. old modelம் இல்லே. ரொம்ப மார்டனும் இல்லே நீங்க கேட்கிறமாதிரி லைட்டாவும் இருக்கும்."

"டேய் பையா, சாருக்கு நல்ல மாட்சா நைலான் சாக்ஸ் ஒரு pair, பாலிஷ் டப்பி, பிரஷ் எல்லாம் எடுத்துக்குடுடா."

"அதெல்லாம் நான் அப்பறமா வாங்கிக்கிறேன்"

"சாக்ஸ் இல்லாம எப்படி சார் ஷூ போடப் போறீங்க?"

"நான் அதைச் சொல்லலை. மத்ததையெல்லாம் சொன்னேன்."

"என்ன சார் நீங்க ஒண்ணு! இவ்வளவு Spend பண்றீங்க. ஒரு two rupeesக்கு mind பண்றீங்களே! டெயிலி நாலணா கொடுத்து பாலீஷ் போடறது வேஸ்ட் சார். இது கையிலே இருந்தா நாம எப்ப வேணும்னாலும் போட்டுக்கலாம்."

"அப்ப நான் வர்றேன். நல்லா உழைக்கும் இல்லியா?"

"கவலைப்படாம போங்க சார். நம்மகிட்டே நீங்க மேலே மேலே நெறைய ஷூ வாங்கப் போறீங்க." அவனுக்கு, தீபாவளிக்குப் புதுசு உடுத்திக்கொண்டு நமஸ்காரம் பண்ணுகின்ற அக்கா, தங்கையிடம், "மேலே மேலே நெறைய பட்டுப் புடவையா கிடைக்கணும்" என்று சொல்லுகின்ற அம்மாவின் ஞாபகம் வந்தது. வழியில் திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டு வந்தான்.

"எப்படியோ வாங்கியாச்சு. நாளைக்கு இல்லாட்டாலும் ஒருநாள் போட்டுண்டு போகாமலா போறோம்!"

வீட்டில், அவன் பெட்டியைப் பிரித்ததும், சுற்றி உட்கார்ந்திருந்தவர்களில்யாரோ 'அட!' என்றார்கள். அம்மா, 'செருப்பு வாங்கலியா?" என்று கேட்டாள்.

''ஏன்! இதுக்கென்ன?''என்று அவன் பதிலுக்குக் கேட்டான்.

''நீ இந்த மா திரியெல்லாம் வாங்கமாட்டியேன்னு கேட்டேன்.''

''ஏன் இப்ப வாங்கினது தப்பா?''

''அதுக்கு இல்லேடா! இதுலே தப்பு என்ன? இந்தக்காலத்துக்கு எல்லாம் வேண்டித்தானே இருக்கு!''

வேஷ்டியை அவிழ்த்துவிட்டு, பேண்ட்டை அணிந்து கொண்டான். அதற்குத் தகுந்தாற்போல ஒரு சட்டையையும் போட்டுக்கொண்டு, பூட்ஸைத் தூக்கிக் கொண்டு முன் ஹாலுக்கு வந்தான் கதவை மூடித் தாளிட்டான். அவன் பூட்ஸுக்குள் காலைத் திணித்துக் கொண்டிருந்தபோது அம்மா கேட்டாள்: ''சரியான அளவு பார்த்துத்தானே வாங்கினே?''

''ஆமாம், ஆமாம்.''

''அந்த கரண்டி மாதிரி ஒண்ணு இருக்குமே. அது ஒண்ணு வாங்கி வச்சுக்கோ.''

''ஓ ஹோ ஹோ! அம்மாவுக்குக்கூட இதெல்லாம் தெரிஞ்சிருக்கே!''—அவனை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தில் ஏதோ ஒன்று கெக்கலி கொட்டியது.

''என்னை என்னடி மண் எழவுன்னு நினைச்சியா? கண்ணாலே பார்க்கிறது. காதாலே கேட்கிறதுகூடவா புரியாம போயிடும்?''

அவன் இப்படியும், அப்படியும் நடந்தான்.

''ஜோரா இருக்கு!''—கூட்டம் கோரஸ் பாடியது.

''என்னங்கடி ஜோரைக் கண்டேள்!''—அவன் முகம் வியர்த்துக் கறுத்திருந்தது.

பூட்ஸை அட்டைப் பெட்டியில் வைத்துப் பெஞ்சுக்கு அடியில் தள்ளியபோது தீர்மானித்துக் கொண்டான். ''நாளைக்கு எப்படியும் போட்டுக்கொண்டு போகவேண்டும்!''

விடியற்காலம் விழிப்பு கொடுத்தபோது,—ஏதாவது காரியம் உறுத்திக் கொண்டிருந்தால் இப்படித்தான். விழிப்பு கொடுத்துவிடும்—பூட்ஸ் போட்டுக்கொண்டு போகவேண்டுமென்று முதல் நாள் தீர்மானித்தது நினைவிற்கு வந்தது.

''இன்னிக்கு மழை பெய்தால் நன்றாக இருக்கும்'' என்று சொல்லிக் கொண்டான். மழை பெய்யா விட்டால் பூட்ஸ் போட்டுக் .கொண்டு போய்த்தான் ஆக வேண்டும். இன்று அவன், 'போய்ட்டு வர்ரேன்' என்று சொல்லிக்கொண்டு கிளம்பும்போது சமையல் அறையிலிருந்து எட்டிப் பார்க்கின்ற அத்தனை கண்களும் அவன் காலைக் கவ்வும். அவன் வானம் கறுத்திருக்கிறதா என்று ஜன்னல் வழியாகப் பார்த்தான். வானம் பளிச்சென்று இருந்தது. பூட்ஸ் போட்டுக் கொண்டு மாடிப்படி இறங்கவேண்டும். பஸ்ஸ்டாண்டு வரை நடக்கவேண்டும். இன்று கூட்டமில்லாத பஸ்ஸில் ஏறி உட்கார இடம் கிடைத்தால் உட்கார்ந்து விடவேண்டும்.

பஸ்ஸில் ஏறியதும் எல்லார் கால்களையும் உற்றுப் பார்த்தான். எங்கே பார்த்தாலும் ஒரே செருப்பு மயமாக இருக்கிறதுபோல் இருந்தது. தான் மட்டும் மேதாவித்தனமாக பூட்ஸ் போட்டுக்கொண்டு வந்து விட்டோமோ என்று தோன்றியது. நன்றாகப் பரிச்சயமான ஒருவர் அவனைப்பார்த்தாற்போல இருந்தது. அவன் கவனிக்காதது மாதிரி சாலையின் பக்கமாகக் கண்களைத் திருப்பிக் கொண்டான். பஸ் ஏதோ ஒரு ஸ்டாப்பிங்கில் நின்று திரும்பவும் கிளம்பியிருக்க வேண்டும். அவனுக்கு உட்காரச் சற்று விஸ்தாரமாக இடம் கிடைத்தாற்போல் இருந்தது திரும்பிப் பார்த்தான். அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பருத்த ஆசாமி இறங்கியிருந்தார். அந்த இடத்தில் ஒரு கான்வென்ட் பையன் உட்கார்ந்திருந்தான். அந்த பையன் ஏதோ ஒரு பாட்டை முணு முணுத்துக் கொண்டு பூட்ஸ் காலால் தாளம் போட்டுக் கொண்டிருந்ததைக் கவனித்துப் பார்த்தான். அவன் இறங்க வேண்டிய இடம் நெருங்கிக் கொண்டிருந்தது. இப்பொழுதே எழுந்து விடலாமா? பஸ் நிற்கவிட்டு இந்தக் கம்பியைப் பிடித்துக்கொண்டு எழுந்திருக்கலாம். ஏதோ உலையில் மாட்டிக்கொண்ட காலைப் பெயர்த்து எடுத்து நடக்க வேண்டியது போன்ற பிரச்னை அவனைப் பயமுறுத்தியது. எல்லாரும் இறங்கும் வரை காத்திருந்தான். இறங்கியபோது கால் நொடித்தது.

அவன் ஆபீஸ் வராந்தாவில் நடந்து வந்து கொண்டிருந்தபோதே தூரத்தில் நின்று கொண்டிருந்த கூடவேலை பார்ப்பவர்களில் ஒருவன், இவன் காலை உற்றுப் பார்த்தாற்போல இருந்தது. அவன், இவனுக்கு அதிகம் பரிச்சயமில்லாத ஒருவனுடன் பேசிக் கொண்டிருந்தான். இவன் அருகே போனான், கைப்பையைக் கட்கத்தில் இடுக்கிக்கொண்டு கால் இரண்டையும் சேர்த்துக்கொணடு நின்றான். பையை ஒரு கையில் தொங்கவிட்டுக் கொண்டு இன்னொரு கையை பேண்ட் பாக்கட்டிற்குள் விட்டுக்கொண்டு நின்றான்.

அவன், 'பேட்டாவா?' 'என்ன விலை?' என்றெல்லாம் கேட்டபோது இவனுக்குத்தான் அந்த கேள்விகளையெல்லாம் மனதில் வாங்கிக்கொண்டு பதில் சொல்லவில்லை என்று தெரிந்தது. அவன், இவன் காலைக் குனிந்து பார்த்துவிட்டு, 'அதுக்குள்ளேயும் என்ன மடிப்பு விழுந்து போச்சு!' என்று சொன்னான். இவனும் காலைக் குனிந்து பார்த்தான். வலது கால் பூட்ஸில் இரண்டு கோடுகள் விழுந்திருந்தன. இடது காலில் அப்படியில்லை. காலையில் போட்டுக்கொண்ட போது வலது காலைத்தான் கஷ்டப்பட்டுத் திணித்துக் கொண்டது ஞாபகத்திற்கு வந்தது. 'இது ஒருசைஸ்; அது ஒரு சைஸ் கொடுத்திருப்பானோ!' என்று சந்தேகம் வர இரண்டையும் சரியாக நிறுத்தி வைத்து அளவு பார்த்தது ஞாபகத்திற்கு வந்தது. இப்பொழுது அவனுடைய கால்களைப் பார்த்தான். அவனுடைய பூட்ஸ்கள் சேறும், சகதியும் பட்டு அப்படியே காய்ந்து போயிருந்தன. அவற்றில் நிறைய மடிப்புகள். ''இதுலேயும் ஒரே மடிப்பா இருக்கே?'' என்று கேட்டான். ''வாங்கி எத்தினி வருஷம் ஆவப் போவுது!'' என்று அவன் பதில் சொன்னான். இவனுக்கு, அவனோடு பேசிக்கொண்டிருந்த ஆசாமி இவனையே பார்ப்பதுபோல இருந்தது. சுவர் ஓரமாக வந்து சாய்ந்து கொண்டு நின்றான். இப்பொழுது அவர்கள் இவனைக் கவனிக்காமல் பேசிக்கொண்டிருந்தனர். இவன் நகர ஆரம்பித்தான். பக்கத்திலிருந்த அறைவாயிலை அடைந்தபோது நிறைய தூரம் நடந்து வந்தாற்போல இருந்தது. திரும்பிப் பார்த்தான். அவனோடு பேசிக்கொண்டிருந்தவன் இவன் நடந்து வந்ததையே பார்த்துக் கொண்டிருந்தாற்போல இருந்தது. அறையில் நுழைந்தபோது ஸ்கிரீனுக்கு அந்த புறத்திலிருந்து, 'யார்?' என்ற கேள்வி வந்தது. அவருக்கு எப்பொழுதும் ஒரு பெருமை. நடை ஓசையை வைத்துக்கொண்டே

வருவது யார் என்று தன்னால் சொல்லிவிட முடியும் என்று அடிக்கடி சொல்லுவார். அவன், ''நான்தான் சார். குட்மார்னிங்.'' என்று கிட்டே போனான். அவர் ஏற இறங்க அவனைப் பார்த்தார். மூலையிலிருந்த பானையிலிருந்து தண்ணீர் எடுத்துக்குடிக்கப்போனான். அவர் சத்தமாகச் சொன்னார்.

''அதானே பார்த்தேன், ஷு போட்டு இருக்கீங்க! நடையை அடையாளம் கண்டுக்க முடியலே யேன்னு பார்த்தேன்''—தண்ணீர் குடித்துவிட்டு நாற்காலியில் வந்து உட்கார்ந்து கொண்டான். சிறிது நேரம் கழித்து வந்த நண்பன், கான்டீனுக்குக் காப்பி சாப்பிடக் கூப்பிட்டான்.

''நான் வரல்லே. இனிமேல் அடிக்கடி காப்பி சாப்பிடறதை நிறுத்திடப் போறேன்.''

''அட சக்கை! எத்தனை நாளைக்கு? எங்கே, எங்கே காலைக் காட்டு பார்க்கலாம்!''

''என்னடா அவ்வளவு அதிசயம்?''

''என்ன இன்னிக்கு படா ஜோரா வந்திருக்கே?''—இவன் பதில் சொல்லவில்லை.

''கான்டீனுக்கு வரவேண்டாம். கையெழுத்து போட்டியா? போகலாம் வா ''

''தினம் கையெழுத்துப் போட்டு என்னத்தைக் கண்டோம்? நான் நாளைக்குச் சேர்த்துப் போட்டுக்கறேன்.''

''பூட்ஸ் தேஞ்சு போகாதுடா. எழுந்து வாடா கழுதை!'' மத்தியானம் யூரினலுக்குப் போய்விட்டு வந்து கொண்டிருந்தபோது சமீபத்தில் பதவி உயர்வு பெற்ற ஒருவன் வந்து கொண்டிருந்தான். அவன் உடை உடுத்துவதில் இப்பொழுது மாற்றம் ஏற்பட்டிருந்தது. அவன் டை கட்டிக் கொண்டிருந்தான். இவனுக்கு அவனைப் பார்த்து, ''உனக்கு ஏதாவது புதுசா இருக்கா?'' என்று கேட்க வேண்டும் போலிருந்தது.

சாயந்திரம் பஸ்ஸில் திரும்புகையில் வழக்கமாக ரசிக்கின்ற சாலையின் வசீகரங்கள், சோபைகள், அவலங்கள் எதுவும் கண்ணில் படவில்லை. பத்து நிமிடங்களுக்கும் மேலாக டிக்கட்கொடுப்பதற்காகப் பஸ்ஸை நிறுத்தி வைத்திருந்த கண்டக்டர் மீது கோபமாக வந்தது. வெகு நேரம் காக்கவைத்த பஸ் அங்கங்கே நின்று புறப்படுவதற்கு வேறு அதிக நேரம் எடுத்துக் கொண்டதால் அவன் இறங்க வேண்டிய இடத்தை அடைந்தபோது பொழுது இருட்டி வந்தது. அவனுக்கு நிம்மதியாக இருந்தது. கால்களை வீசி வீசி நடந்தான். உள்ளுக்குள் சுண்டுவிரல் நொந்தது. சுபாவமாகவே நடப்பதாகவே சொல்லிக் கொண்டான். காலையிலிருந்ததைவிட இப்பொழுது லேசாக இருப்பதாக நினைத்துக் கொண்டான். தினமும் இது ஒரு சங்கடமாக இருக்குமோ என்று நினைத்துக் கொண்ட கணத்தில், தன் காலுக்குப் பூட்ஸ்பழக்கமாகி விட்டது என்று வலியுறுத்திக் கொண்டான். நிற்காமல் சென்ற பஸ்ஸைத் தொடர்ந்து ஒருவன் பூட்ஸ் காலுடன் வேகமாக ஓடினான். நம்மால் இது மாதிரி வேகமாக ஓட முடியுமா என்று கேட்டுக் கொண்டான்.

அவன் வீட்டுப்படி யேறியபோது கோயிலுக்கு விளக்குப் போட்டு விட்டு வந்த தங்கைகளும் பின்னாலே வந்தனர். அவன் அவர்களுக்கு முன்னால் வழி விட்டான். அவர்களில் ஒருத்தி, சில நாட்களாகப் புடவைகட்ட ஆரம்பித்திருந்தாள். அவனுக்குத்தான் காலேஜ் போகத் தொடங்கிய காலத்தில் பேண்ட் போட்டுக் கொள்ள ஆரம்பித்தது நினைவிற்கு வந்தது. கூடப்படித்த ஒன்றுவிட்ட சகோதரன் ஒருவன் சலூனுக்குப்போவதற்குக் கூடப் பேண்ட் மாட்டிக்கொண்டதையும் தனக்கு அது சாத்யமாகாததையும் நினைத்துப் பார்த்தான்.

'இத்தனை நாள் தாவணி போட்டுண்டு, இப்பொழுது புடவை கட்டிண்டு போறபோது உனக்கு ஏதாவது புதுசா இருக்கான்னு' சாவித்திரியைக் கேட்கனும். அவளுக்கு அப்படி ஒன்றும்புதிதாக இருக்காது என்று அவனே சொல்லிக் கொண்டான். விடுமுறை நாளில் நாலுபேரோடு சேர்ந்து சினிமாவுக்குப்போகும் போது அவனுடைய வாட்சை வாங்கிக் கட்டிக் கொண்டு தயங்காமல் போகிறவளுக்கு இதில் என்ன வித்தியாசம் தெரியப்போகிறது!

இரண்டு பூட்ஸ்களுக்கும் விளையாட்டாகப் பாலீஷ் போட்டு முடித்திருந்தான். கைகழுவிக்கொண்டபோது 'தண்ணி எத்தனைமணிக்கு வரும்?'' என்று கேட்டான். தண்ணீர் வந்ததும் முகத்தைக் கழுவி, உடை அணிந்து கொண்டு வெளியில் கிளம்பினான். அவன் படியிறங்குவதை கதவை ஒருக் களித்துக் கொண்டு நிறையக் கண்கள் பார்த்தன.

அவன் போய்ப் பத்து நிமிடங்கள் கூட ஆகியிருக்காது. கதவு தட்டப்பட்டது. தாழ்ப்பாள் திறக்கப்பட்டதை உணர்ந்து கொண்டதும் அவன் வெளிப்புறத்திலிருந்து கதவை வேகமாகத் திறந்து கொண்டு நுழைந்தான். பேண்ட்டை அவிழ்த்து விட்டு வேஷ்டியைக் கட்டிக் கொண்டான். குதிகால் தேய்ந்திருந்த கட்டை விரல் வளைவு நைந்திருந்த செருப்பைமாட்டிக் கொண்டவன் முணுமுணுக்கிற மாதிரி சொன்னான்: ''மழைவர்ரப் போலருக்கு எங்கேயாவது நனைஞ்சு வீணாப் போயிடுத்துன்னா என்ன பண்றது? நம்மாலே சும்மா வாங்க முடியறதா?''—அவன் கால்களை வீசி வீசி நடந்து கீழிறங்கினான். ●

---

## நான்காவது இதழ்—இரு திருத்தங்கள்

'கரைந்த நிழல்கள்' (அசோகமித்திரன்) கட்டுரையில்—

இதில் சம்பாஷணைகள் பாதிக்குமேல் தமிழில்தான் நடக்கின்றன. ஓரளவு தெலுங்கில். இன்னும் ஒரு பகுதி ஆங்கிலத்தில். ராம ஐயங்காரும் அவர் மகனும் ஆங்கிலத்தில்தான பேசமுடிகிறது. காரணம் அவர்கள் உணர்ச்சிகளைக்கூட அறிவின்தளத்திற்கு ஒதுக்கிவிட்டு அந்தத் தளத்திலேயே இயங்குகிறார்கள்.

—என்று வாசித்துக் கொள்ளவும். (7-ஆம் பத்தி)

∴ ∴ ∴

''புதுமை, சோதனை,...'' (வெ. சாமிநாதன்) கட்டுரையில் வந்திருக்கவேண்டிய சரியான சொல் 'Kafkaesque' (முதல் பத்தி—பக்கம் 15)

# எழுத்தாளர் ‘பாசறை’

சா. கந்தசாமி

நான்காவது தேசிய புத்தகக் கண்காட்சி திட்டமிட்டதற்குச் சரியாகப் பத்து நாட்கள் தாமதமாக டிசம்பர் இருபத்தொன்பதாம் தேதி துவங்கியது.

கண்காட்சியில் எட்டாயிரம் புத்தகங்கள். இந்திய மொழி புத்தகங்களோடு—ஆங்கிலப் புத்தகங்களும் இடம் பெற்றிருந்தன. ஆனால் சமஸ்கிருத புத்தகங்கள் எதுவும் கண்களில் படவில்லை. இந்தக் .காட்சியிலி இருந்த புத்தகங்களில் இந்திமொழிப் புத்தகங்களின் அமைப்பும் அட்டைப் படங்களும் சிறப்பாக இருந்தன. மனித உருவை ஒதுக்கித் தள்ளிவிட்டு கோடுகளால் ஓவியத்திற்கு நவீன அர்த்தத்தைக் கொடுத்திருந்தார்கள். அதற்கடுத்தபடியாக மலையாள, வங்காள, குஜராத்தியப் அஸ்ஸாமிய, புத்தகங்கள். தமிழ் கொஞ்சம் முன்னேறி இருந்தாலும் அவைகளோடு ஒப்பிடும் படியாகயில்லை வாசகர் வட்டம் புத்தகங்களைத் தவிர. தமிழ்ப் புத்தகங்களின் அட்டைப் படங்கள் சினிமா போஸ்டர் மாதிரி பளீரென்று அடித்தன. மொந்தை மொந்தையாக மூஞ்சி. மார்பு கச்சைகள். பார்க்கச் சகிக்கவில்லை. நல்ல புத்தகங்களைத் தான் போட முடியாவிட்டாலும் நல்ல அட்டைகளைக் கூடப் போடத் தெரியவில்லை.

புத்தகக் கண்காட்சியை ஒட்டி பல புத்தக வெளியீட்டு நிறுவனங்கள் விற்பனைக் கூடங்களை அமைத்திருந்தன. தமிழ்நாட்டின் தலைநகரில் நடைபெற்ற கண்காட்சியில் சிறப்பாக தமிழுக்கென ஒரு விற்பனை அரங்கங்கூடயில்லை ஒன்றுபட்டுச்செயலாற்ற முடியாததால்பெரியவிற்பனைக் கூடம் எதையும் தமிழுக்கென்று அமைக்க முடியவில்லை. தெலுங்கு மொழிக்காரர்கள் தங்கள் சங்கத்தின் மூலமாக ஒரு விற்பனைக்கூடத்தை அமைத்திருந்தார்கள். இப்படி ஒரு அமைப்பு தமிழ் நாட்டில் இல்லாதபடியால் பல தமிழ் வெளியீட்டாளர்களைப்புத்தகக் கண்காட்சியில் காண முடியவில்லை. ஒரு விற்பனைக் கூடத்தை—பாரி, வானதி, மல்லிகை, தமிழ்ப் புத்தகாலயம்—ஆகிய நால்வரும் பங்கு போட்டுக் கொண்டு நெருக்கமாகப் புத்தகங்களை அடுக்கி வைத்திருந்தார்கள். பிரபல தமிழ் எழுத்தாளர்கள் பலர் இங்கேயே சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

பதினெட்டு நாட்கள் நடைபெற்ற புத்தகக் கண்காட்சிக்கு ஒவ்வொரு நாளும் கூட்டம் வந்தது; டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்தது. ஆங்கிலப் புத்தகங்கள் தாராளமாக விற்பனையாயின. தமிழ்ப் புத்தகங்கள் யாரும் தள்ளி விடாமல் கொஞ்சம் விற்பனை ஆகியது.

நான்காவது தேசிய புத்தகக் கண்காட்சியில் மகரம் தொகுத்த ‘காந்தி கதைகள்’ என்ற புத்தகத்திற்கு தமிழ்ப் பிரிவில் ‘சிறந்த அமைப்புப் புத்தகம்’ என்ற பரிசு கிடைத்தது.

புத்தகக் கண்காட்சியின் ஓர் அம்சமாக இரண்டாவது எழுத்தாளர் காம்ப்பை அமைத்திருந்தது நேஷனல் புக் டிரஸ்ட். காம்ப் ஜனவரி இரண்டாந் தேதி துவங்கியது. ஆந்திர கல்வி அமைச்சர் நரசிங்க ராவ் தலைமை தாங்க, தமிழகக்கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் துவக்கி வைத்து தான் எழுத்தாளனில்லை என்றும், பெருமை சார்ந்த எழுத்தாளர்களைப் பார்க்கப் பெருமையாக இருப்பதாகவும் சொன்னார். அவ்வளவுதான்.

அடுத்து பேசவந்த டாக்டர் மு. வரதராசன் இதை கெட்டியாகப் பற்றிக் கொண்டார். நாவலரைப் பார்த்துக் கொண்டார். குரல் உயர்ந்தது. அவை யடக்கத்தால் நாவலர் சொல்லாததையெல்லாம் மு.வ. போட்டு உடைத்தார். ‘மாண்புமிகு நாவலர் நாடு அறிந்த நல்ல எழுத்தாளர். ‘மன்றம்’ ஏட்டின் வாயிலாக நல்ல பல கருத்துக்களை நாளும் சொல்லி நாட்டில் புரட்சிக் கனல் மூட்டியவர். சாகித்ய அகாடமியில் அங்கம் வகிக்கும் பெரும் எழுத்தாளர்’ என்றெல்லாம் அழுத்திச் சொன்னார். சில நாட்களுக்கெல்லாம் எதற்குச் சொன்னார் என்பது தெரிந்தது.

மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பல்கலைச் செல்வர் தெ. போ. மீனாட்சி சுந்தரம் காலிசெய்த நாற்காலி டாக்டர் மு. வரதராசனுக்குக் கிடைத்தது.

ஆந்திரக் கல்வி அமைச்சர் நரசிங்கராவ் மொழி, நாகரிகம், எழுத்து பற்றி நிதானமாகப் பேசினார், உருது கவி அலி சர்தார் ஜப்பரி ‘குறிப்பிட்ட ஒரு நூலை இந்திய மொழிகள் சிலவற்றில் ஒரே சமயத்தில் கொண்டுவர ஏற்பாடு செய்யவேண்டுமென்றார். மேல் நாட்டில் ஆங்கிலம், ஜெர்மன், பிரஞ்சு, இத்தாலி—மொழிகளில் ஒரே சமயத்தில் ஒரு நூல் வெளியாவதையும் சுட்டிக்காட்டினார்.

துவக்க விழாவைத் தொடர்ந்து காம்ப்கூடியது காம்ப்புக்கு எனக்குத் தமிழ் தெரியவில்லை. காம்ப்பில் கலந்து கொண்ட சோமு காம்ப்பை பாசறை என்றார். பாசறையில் வில்லிருக்கும். அம்பிருக்கும் வேலியிருக்கும். வாசலில் புரவியிருக்கும். கரியிருக்கும். வீரர்களுமிருப்பார்கள். இங்கே தொடர்கதை மன்னர்களிருந்தார்கள். சோமு சரித்திரக் கதைக்காரர். அவர் சொல்வதை நாம் கேட்கவேண்டும். இல்லாவிட்டால் ‘பாசறை’—என்று தொடர்கதை எழுதுவார். கல்கி பத்திரிகை அதனை உடனே தொடராக வெளியிடும். சாகித்ய அகாடமி பரிசும் கொடுக்கும். தொந்தரவு இல்லாமல் அவர் சொல்வதை கேட்டுக் கொண்டு பாசறைக்குள் செல்லுவோம்

இரண்டாவது எழுத்தாளர் காம்ப்பில் தமிழ் தெலுங்கு, குஜராத்தி, உருது எழுத்தாளர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் இந்த மொழிகளின் அசல் இலக்கிய கர்த்தா எவரையுங்காணோம்—உருதுவில் கவி அலி சர்தார் ஜப்பரியைத் தவிர. தமிழில் கலந்து கொண்டவர்கள்: மீ ப. சோமசுந்தரம் நா. பார்த்தசாரதி, மு. வரதராசன், ர. சு. நல்லபெருமாள், ஜெகசிற்பியன், அகிலன்.

தேசிய ஒருமைப்பாட்டையும், மாநில ஒருமைப்பாட்டையும், எழுத்தாளர்களுக்கிடையில் பரஸ்பரம் நெருங்கிய இணைப்பையும் ஏற்படுத்தி வளர்க்க இந்தக் காம்ப் என்று சொல்லப்பட்டது. ஆதலால் உண்டியும் உறைதலுங்கூட ஒன்றாக என்று திட்டமிட்டிருந்தார்கள். ஆனால் கடைசி நிமிடத்தில் இட நெருக்கடி காரணமாக உள்ளூர் ஆசாமிகளைத் தள்ளிவிட்டு விட்

டார்கள். உள்ளூர் ஆசாமிகளில் சிலர் சரியாகச் சாப்பாட்டு நேரத்திற்கு வந்து போனார்கள்.

'சமீப காலத்தில் மிகவும் குறிப்பிடத்தக்கப் படைப்புக்கள்'—ஒரு பேச்சின் தலைப்பு. யாரும் தலைப்பை ஒட்டிப் பேசவில்லை. தமிழில் மட்டுந்தான் என்பதல்ல. எல்லா மொழிகளிலும் நிலை அப்படித்தான். குஜராத்தி மொழிக்கார டாக்டர் மேத்தா எப்போதோ தான் எழுதிய கதையைக் கொண்டுவந்து படித்தார். அலிசர்தார் ஜப்பரி தன் கவிதைகள் சிலவற்றைச் சொன்னார். வெறுங் கையோடு வந்திருந்த தமிழ்ப் பேச்சாளர் வெளியே எழுந்து சென்றார்.

ர. சு. நல்லபெருமாள் ஆங்கிலத்தில் தன்னைப் பற்றியும் கல்லுக்குள் ஈரம் பற்றியும் எழுதிக்கொண்டு வந்திருந்த குறிப்பை வாசித்தார். காந்தி தன் கதாநாயகன் கரங்களில் உயிர் துறப்பதாகக் கற்பனைச் செய்தியை வெட்கமின்றி மீண்டும் சொல்லிக்கொண்டார். சரித்திரம் தெரியாத இவர் மீண்டும் உயர்நிலைப் பள்ளிக்கு சரித்திரம் படிக்கப் போகவேண்டும். இல்லாவிட்டால் ராஜராஜசோழன், நரசிம்மவர்மன் கதை எழுதப் போகவேண்டும் அங்குதான் கயிறு செல்லுபடியாகும். அருண்மொழி, ஜடாமுடி, பல்லக்கு, பரிதி—என்று திரித்துக்கொண்டே போகலாம். அவ்வளவு இடமிருக்க எதற்கு உண்மையின் நிழலில் பதுங்குகிறார்கள். ர. சு. நல்லபெருமாள் காந்தியின் நிழலில் பதுங்கி மறைந்தபோது, தமிழின் அன்றைய பிரதான பேச்சாளர் ஜெகசிற்பியன் ஆயுதத்துடன் பாசறைக்குள் நுழைந்தார். ஆயுதம் அவர் புத்தகம். நிழலின் கற்பு. (டாக்ஸியில் வந்த களைப்பு முகத்தில் தெரிந்தது. ஆயுதம் அகிலன் கைக்குச் சென்றது. ஜெகசிற்பியனை அகிலன் அறிமுகப்படுத்தி வைத்தார். அவருக்காக, அகிலனே கதை சொன்னார். தமிழின் சமீபத்திய குறிப்பிடத்தக்க படைப்பான. கதை ஆரம்பமாகிறது.

அவன் மனைவிக்கு உடம்பு சரியில்லை. மருந்து வாங்கவேண்டும். அவனிடம் பணமில்லை. கவலையோடு வெளியே வந்தான். வழியில் ஒரு ரிக்ஷாகாரன் எதிர்ப்பட்டான். அவனைப் பார்த்ததும், "இன்னசார். ஏறு" என்றான். அவன் ஏறிக்கொண்டான். ஒரு வீட்டின் முன் ரிக்ஷா நின்றது. "இறங்கி உள்ளே போ சார்" என்றான். அவன் உள்ளே சென்றான். ஒரு பெண் வந்து அவனை மாடிக்கு அழைத்துச் சென்றாள். அங்கே ஒருத்தி அவன் முன்னே வந்து புன்னகை பூத்தாள். அவனுக்கு என்னவோ போலிருந்தது. வேகமாகக் கீழே வந்து ரிக்ஷாக்காரனை "அதற்கு என்ன அர்த்த"மென்றான். அவன், "போ, சார் பணம் வரும்" என்றான். அவனுக்கு மனமில்லை. வீட்டிற்கு நடந்தான். வாசலில் அழுகுரல். அவன் மனைவி இறந்துவிட்டாள். ஆத்மாவைக் காத்துக் கொண்ட அவனால் மனைவியைக் காக்க முடியவில்லை.

கதையின் பேர் 'பொன்னகரமல்ல' புதுமைப் பித்தனின் பொன்னகரத்திற்கு மறுப்பு போலும். இது கதையாகவும் வரவில்லை; மறுப்பாகவும் வரவில்லை. புதுமைப் பித்தனிடம் தார்மீகக் கோபமும், தனிப் பார்வையும் இருந்தது. ஜெகசிற்பியனிடம் அந்த அம்சங்கள் ஏதுமில்லை என்பதோடு, ஒரு கதையை ஒழுங்குபடுத்திச் சொல்லவும் தெரியவில்லை. இந்தமாதிரியானவர்களை அரசாங்கச் சார்பு நிறுவனங்கள் எப்படித்தான் தேடிக் கண்டுபிடிக்கின்றனவோ தெரியவில்லை. தேடிக் கண்டுபிடிப்பதாவது? இவர்கள் தான் அதன் வாசல்படியில் நிரந்தரமாகக் குந்திக் கிடக்கிறார்கள் என்று செய்தி வருகிறது.

'பொன்னகரமல்ல' படிக்கப் பட்டபோது பகல் மணி 12-45. மு. வரதராசன் வேகமாக உள்ளே வந்தமர்ந்தார். கூட்டம் ஒரு மணிக்கு சாப்பாட்டிற்காகக் கலைந்தது.

காம்ப்பின் கடைசிக்கூட்டம். இலக்கியப்போக்குகள். தமிழ் பற்றிய கட்டுரையை நா. பார்த்தசாரதி வாசித்தார். தமிழுக்குச் சிறுபத்திரிகைகள் தாமரை, தீபம், கணையாழி, நடை, எழுத்து, கசடதபற—பங்கு பற்றியும் இலக்கியக்குழுக்கள், புதுக் கவிதை பற்றியும் விரிவாகச் சொன்னார். பழையது பக்கமே அவர் செல்லாததை மிகவும் குறிப்பாகச் சொல்லவேண்டும். சோமு, மு. வரதராசன், ர. சு. நல்லபெருமாள், ஜெகசிற்பியன்—எல்லாரும் எதிரே உட்கார்ந்திருந்தும் நா. பார்த்தசாரதி சொன்ன விஷயங்களில் அவர்களுக்கு அதிகப் பரிச்சயமில்லாததால் விவாதம் ஏதும் சொல்லும்படியாக நடைபெறவில்லை, தெலுங்கு மொழிக் கட்டுரையை. ஆஞ்சநேயலு வாசிக்கப் புதுக் கவிதை பற்றி ஒரு பெரிய சர்ச்சையே மூண்டது. பல 'திகம்பர' கவிதைகள் மொழி பெயர்த்துச் சொல்லப் பட்டன கணிசமான அளவிற்குப் புதுக் கவிதை தெலுங்கில் வளர்ந்திருப்பதும் விவாதத்தின்போது தெரிந்தது,

பிரசுரத்தைப் பற்றிப் பேச்சு வந்தபோது, "ஒரு சிறுகதைத் தொகுப்பு பல ஆயிரம் பிரதிகள் விற்றது" என்றார் மு. வரதராசன்.

"P. U. C.—பாடப் புத்தகம் அல்லவா அது" என்றார் நா. பார்த்தசாரதி.

"ஆமாம் ஆமாம்" மு. வரதராசன்.

"ஆசிரியர்களுக்குச் சன்மானம் கொடுக்கப் பட்டதா?"— ஒருவர்.

"ரூ 250க்கு சிபார்சு செய்தேன். ரூ 150 தான் கொடுத்தார்கள்."

"அதுகூட வக்கீல் நோட்டீஸ்க்குப் பிறகு தானமே" பழய குரல்.

"என்ன அது" என்று துள்ளி எழுந்தார் நேஷனல்புக் டிரஸ்ட் செயலாளர் கர்தார் சிங் துக்கல். தமிழர்கள் நாசுக்காக அந்த விஷயத்தைத் தள்ளி விட்டார்கள். ஆனால் ஒரு விஷயம் காதில் விழுந்தது. இந்த ரூ 150 கூட எல்லா ஆசிரியர்களுக்கும் தரப்படவில்லையாம். வக்கீல் நோட்டீஸ் விட்டவருக்கு மட்டுந்தான் கிடைத்ததாம்.

●

---

# அக்கம் பக்கம்

டிசம்பர் மாதம் சென்னைக்குக் கொண்டாட்டம். பனிக்குக் கன குஷி. கொட்டித் தீர்த்தது. தீர்த்தது என்று சொல்லித் தீர்த்துக் கட்டிவிட முடியாது. இன்னும் பனி கொட்டிக்கொண்டுதான் இருக்கிறது.

இலக்கிய உலகம் என்றும் போலிருக்கிறது என்று சொல்லிவிட முடியாது. நான்காவது தேசிய புத்தகக் கண்காட்சி நடந்து முடிந்தது. க.நா. சுப்ரமண்யம் அதன் மலரில் ஒருகட்டுரை எழுதிப்பலரை முகஞ்சுளிக்க வைத்திருக்கிறார்.

பிரபல நாவலாசிரியர், கட்டுரையாளர், விமர்சகர், தமிழ் வளர்ச்சிக் கழக—சாகித்ய அகாடமிப் பரிசுகள் பெற்ற டாக்டர் மு. வரதராசன் மதுரை யுனிவர்ஸிட்டிக்கு வைஸ் சான்ஸ்லராகி விட்டார். கன்னித் தமிழன்னை களிப்புறுகிறாள்.

ஜனவரி முடியப்போகிறது. சாகித்ய அகாடமியின் பரிசுபற்றிய அறிவிப்பு வரும். இந்த வருஷப் பரிசு பற்றியும் ஹேஷ்யங்களும் வருகின்றன. பரிசு ஜெகசிற்பியனுக்கு என்பது ஒரு ஹேஷ்யம். அது உண்மையானால் 'கல்கி' பத்திரிகையின் கிரீடத்தில் இன்னொரு 'கல்'. இப்போதே நான்கு 'கல்'. அதற்கு இன்னும் எத்தனை கல்லோ?

அசல் இலக்கிய கர்த்தாக்கள் வெட்கப்படவேண்டிய நிகழ்ச்சி தமிழ் இலக்கிய உலகில் மீண்டும் 17-1-1971 அன்று நடந்தது. கல்கி பத்திரிகை 'கல்கி'யின் 'மோகினித் தீவை' மீண்டும் வெளியிட ஆரம்பித்துவிட்டது. 'பொன்னியின் செல்வன்' இன்னும் முடிந்த பாடில்லை. அதற்குள் 'கல்கி'யின் மற்றொரு தொடர். கல்கியின் தரத்திற்கு எழுதுகிற அகிலன், சோமு, ராஜம்கிருஷ்ணன்...... இத்யாதி கர்த்தாக்கள் செல்லுபடியாகவில்லை என்பது தெரிகிறது.

ராஜம்கிருஷ்ணன் என்றதும் அவரது 'கலைமகள்' கட்டுரை நினைவிற்கு வருகிறது. பத்திரிகையில் எழுதிப் பிரபலமான அவருக்கும் குறை வந்துவிட்டது. கட்டுரையில் முறையிட்டுவருத்தப்பட்டிருக்கிறார். அவர் எழுதாத தமிழ்ப் பத்திரிகையும், பெறாத பத்திரிகைப் பரிசும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இன்றைய நிலையை வைத்துக் கொண்டு — பத்திரிகையின் உப்பையே பெருமளவிற்குத் தின்று வளர்ந்த — ராஜம் கிருஷ்ணன், தமிழ்ப் பத்திரிகை உலகம் அவரைக் கண்ணெடுத்தும் பாராதது போல் எழுதியிருப்பது எப்படி என்பதுதான் எனக்கு இந்தக் கணம் வரையிலும் பிடிபடவில்லை.

பத்திரிகை—என்றதும் 'தினமணி கதிர்' நினைப்பு வருகிறது. அது 'கசடதபற' என்ற சொற்களை வைத்துக் கொண்டு நகைச்சுவையின் பெயரால் 'கசடதபற' பத்திரிகையை துணுக்காலும், படத்தாலும் கிண்டல் பண்ணியிருக்கிறது. அதற்கு 'கசடதபற' வறட்டுத் தவளைகளாகத்தான் படும். கசடதபற இலக்கியப் பத்திரிகை இதற்கு இலக்கியம் இன்னதென்று தெரியும்.

தினமணி கதிருக்கு இலக்கியம் இரண்டாம் பட்சம், மூன்றாம பட்சம், நான்காம் பட்சம், ஏன் கடைசிப் பட்சமாகவும்மிருக்கலாம். பட்சமே இல்லாமலும் மிருக்கலாம்.

சென்ற மாதம் 'மக்கள் எழுத்தாளர் சங்க'த்தில் திரு. டி. செல்வராஜ் ஒரு அறை கூவல் விட்டார். "கம்யூனிஸ்டுகள் தான் தரமான இலக்கியங்களைப்படைத்திருக்கிறார்கள். இதை எவராவது மறுக்க முடியுமா?". கூட்டத்திலிருந்த சா. கந்தசாமி "நான் உங்களுடைய சவாலை ஏற்றுப் பதில் சொல்ல இந்தக் கணமே தயாராயிருக்கிறேன்" என்று முன் வந்தார். கூட்டத்தில் சலசலப்பு. முகங்கள் அப்படியும் இப்படியுமாகத் திரும்பின. சங்கத்தின் செயலாளர் "இந்த விவாதத்திற்கு நாங்கள் தனியாகவே கூட்டம் போட விரும்புகிறோம். அது பற்றிய விவரங்களைப் பிறகு தெரிவிக்கிறோம்" என்று சொல்லி அமைதியை உண்டாக்கினார்.

கடைசியாக ஒரு விஷயம். 'பரமார்த்த குரு கதை' புத்தகம் தேசிய புத்தகக் கண்காட்சியில் கிடைத்தது. அதன் முகவுரையில் கண்டுள்ள செய்தியிது.

'பரமார்த்த குரு கதை என்னும் பெயர் கொண்ட இந்தக் கட்டுக் கதை கடந்த நூறு வருஷங்களுக்கு முன்பே எழுதியிருக்க வேண்டுமென்று தெரிகிறது. நூறு வருஷங்களுக்கு முன், சுப்ரதீபக் கவிராயர் என்று ஒரு சிறந்த தமிழ் வித்வானிருந்தார். அவர் காலத்தில், வீரமா முனிவர் என்ற பெயருள்ள ஒரு பிரஞ்சுக்காரரும் இங்கிருந்தார். அவர் தமிழ்ப்பாஷையில் ஆர்வங் கொண்டு சுப்ரதீபக் கவிராயருக்குப் பொருளதவி செய்து தேம்பாவணி, பரமார்த்த குரு கதை, இன்னும் சில அரிய நூல்களையும் எழுதுவித்துத் தம் பெயரால் அச்சிட்டார். பின் இந்த உண்மையுணராதார், தேம்பாவணி பரமார்த்த குரு கதை முதலியவைகளை அம்முனிவர் இயற்றியவைகளென்றே கொண்டு புகழ்ந்து பாராட்டி வருகிறார்கள்.'

—நா. கிருஷ்ணமூர்த்தி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.